# ஜீவாவின் பாடல்கள்






அணிந்துரை:

வெ. சாமிநாத சர்மா

NCBH

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
6, நல்லதம்பி செட்டி தெரு,
சென்னை-2.

முதற் பதிப்பு : 1962
இரண்டாம் பதிப்பு : ஜனவரி, 1968
மூன்றாம் பதிப்பு : பிப்ரவரி, 1975


விலை ரூ. 4-00

அச்சிட்டவர் :
நியூ செஞ்சுரி பிரிண்டர்ஸ்,
அம்பத்தூர், சென்னை-58.




# பதிப்புரை

**உயர்திரு. ப. ஜீவானந்தம்** அவர்கள் புனைந்த பாடல்களை இன்று நூல் வடிவத்திலே தமிழ் மக்கள் முன்னிலையில் படைக்க எமக்கு வாய்ப்புக் கிடைத்தமைக்குப் பெருமைப் படுகின்றோம். ஜீவா அவர்கள் இவ்வாய்ப்பினை எமக்கு மனமுவந்து அளித்தமைக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

இந்நூலில் அடங்கும் பாடல்கள் 1932-45 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் புனையப்பட்டவை. இவை தவிர பிற பாடல்களும் நூல் வடிவம் காணக் காத்திருக்கின்றன. ஜீவா அவர்களின் கடுமையான பொதுத் தொண்டின் காரணமாக இப் பாடல்களைத் தேடித் திரட்டிச் சரிபார்த்துத் தொகுக்கப் போதிய நேரம் கிடைக்காமையால் இந்நூல் வெளிவருவதில் காலதாமதமாகிவிட்டது. இப் பாடல்களைத் திரட்டித் தொகுப்பதில் ஜீவா அவர்களின் பங்கு மிகப்பெரியது; வேறு பல அன்பர்களும் உதவியளித்திருக்கிறார்கள். இவர்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றி.

இந்நூலுக்கு அணிந்துரை யொன்று வழங்குமாறு நமது நெருங்கிய நண்பரும் அறிஞருமான உயர்திரு. **வெ. சாமிநாத சர்மா** அவர்களை அணுகி வேண்டிக் கொண்டோம். நண்பர்கள் அவர்களின் உடல்நலக் குறைவும், பன்முக வேலைச்சுமையும் தமிழகம் அறிந்த சேதியல்லவா? இந்நிலையில் அவர்கள் எழுதித்தர ஒப்புக் கொள்வது அரிது; அப்படி ஒப்புக்கொண்டாலும் தாமதமாகத்தான் கிடைக்கும் என்று நினைத்தோம். எனினும்,

நண்பர் அவர்கள் பல்லாண்டுகளாக இடையருது புரிந்து வரும் தியாகத் தொண்டுக்கு மற்ருெரு சான்ருக—தமது சான்று தேவையில்லை; எடுத்துக் காட்டாக என்று சொல்வதே சரி—ஓரே நாளில் கருத்தாழமிக்க அணிந்துரை யொன்று வழங்கி எம்மை வியப்பில் ஆழ்த்திவிட்டார். அவர்களுக்கு எமது நன்றியுணர்ச்சியைத் தெரிவிக்க வார்த்தைகள் போதா.

பிறகு ஜீவா அவர்களின் பாடல்களைத் தமிழிலக்கியத்தின் வரலாற்று வரிசையிலே வைத்து வரலாற்றுப் பார்வை கொண்டு மதிப்பீடு செய்து நண்பர் திரு. **ஆர். கே. கண்ணன்** அவர்கள் ஒரு அரிய முன்னுரை வழங்கியுள்ளார். காலக் கண்கொண்டு, வாய்மையின் ஒளியில் நின்று, ஜீவா பாடல்களை முற்றும் இரசித்து அனுபவிப்பதற்கு இம் முன்னுரை பெரிதும் துணைபுரியும் என்று நம்புகிருேம். திரு. கண்ணன் அவர்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றி.

இந்நூலைத் தமிழகம் ஏற்று, நுகர்ந்து பயன்காணும் என்று நம்புகிருேம். வணக்கம்.

**பதிப்பகத்தார்.**

# பொருளடக்கம்

# அணிந்துரை

கவிஞன், தேவையை முன்னிட்டுத் தோன்றுகிறான். அந்தத் தேவையைப் பூர்த்தி செய்கின்ற முறையிலேயே அவன் படைப்புக்கள் அமைகின்றன. எந்த நிலையில் எப்படிப் படைக்க வேண்டுமென்பது, அவனுக்குத் தெரிவதுபோல் வேறு யாருக்கும் தெரிவதில்லை. காரணம், அவன் தொலைநோக்குடையவனாயிருப்பதுதான். மற்றும், அவனைச் சமுதாய வைத்தியன் என்று சொல்லவேண்டும். ஆனால், தான் செய்கிற சிகிச்சைக்காக, யாருடைய வந்தனத்தையும் அவன் எதிர் பார்ப்பதில்லை; அப்படியே யாருடைய நிந்தனையையும் அவன் பொருட்படுத்துவதில்லை அவன் ஒரு நிஷ்காம்ய கர்மயோகி.

சுதந்திர வாழ்வு நடத்திக்கொண்டிருக்கிற காரணத்தினால் ஒரு நாடு, இறுமாந்துபோய், மற்றவர் சுதந்திரத்திற்கு மதிப்புக் கொடாமற் போனாலுஞ் சரி, மற்றவர் சுதந்திரத்தைப்பறிக்க முற்படுமானாலுஞ் சரி, அப்பொழுது கவிஞன் தோன்றி ''அப்படிச் செய்யாதே; பிறருடைய சுதந்திரத்திற்கு இழுக்குத் தேடுவது உன் சுதந்திரத்திற்கு இழுக்குத் தேடிக் கொள்வதாகும்'' என்று எச்சரிக்கை கொடுக்கிறான்.

இங்ஙனமே அடிமைத்தனத்தில் உழன்றுகொண்டிருக்கும் ஒரு நாட்டில் கவிஞன் தோன்றி, நாட்டின் அவல நிலையை மக்களுக்குப் பலவகையாலும் உணர்த்துகிறான்; உணர்ச்சியூட்டி மக்களைச் செயலுக்கு உந்துகிறான்.

உந்துவதோடு அவன் நின்றுவிடுவதில்லை; சில சந்தர்ப்பங்களில் தானே செயலிலும் இறங்கிவிடுகிறான். அவனுடைய

நாட்டின் இழிநிலை, அவனைக் கவிஞனாக மட்டும் இருக்கவிடா மல் கர்ம வீரனாகவும் ஆக்கிவிடுகிறது. இந்த இரண்டு நிலை களிலும் அவனுடைய திறமை ஒரே தரத்தில் அமைந் திருக்கிறது.

அடிமைத்தனத்தில் அவதிப்பட்டுக்கொண்டிருந்த நாடு களில் தோன்றிய கவிஞர்களில் பலர் இங்ஙனம் இரண்டு நிலை களிலும், அதாவது கவிஞர்களாகவும் கர்ம வீரர்களாகவும் இணைந்து அரும் பணியாற்றியிருப்பதைப் பார்க்கிறோம்.

ஐர்லாந்தின் சுதந்திரத்திற்காகப் போராடிய டிவேலரா, மாக்ஸ்வெய்னி, பாத்ரெக்பியர்ஸ், டக்ளஸ் ஹைட் இப்படிப் பலர் கவிஞர்களாகவும் கர்ம வீரர்களாகவும் இருந்திருக் கிறார்கள். இத்தாலியின் சுதந்திரத்திற்காக அரும்பாடுபட்ட லியோபார்டி, மாஜினி போன்ற கவிஞர்கள், கர்ம க்ஷேத் திரத்தில் துணிந்து இறங்கியவர்கள். இப்படி அநேக உதார ணங்களைச் சொல்லிக் கொண்டு போகலாம்.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில், கவிஞராகவும் கர்ம வீரராகவும் திகழ்கின்ற ஒருசிலரில் முக்கியமானவர் திரு. ஜீவானந்தம் அவர்கள். அவருடைய சொல்லாற்றல், செயல் திறன் முதலியவை பற்றித் தமிழ்நாடு நன்கறியும். நான் விரித்துச் சொல்லத் தேவையில்லை, ஆனால் அவருடைய வாழ்க்கையே ஒரு கவிதை என்பதை ஒரு சிலர்தான் அறிந் திருக்கக்கூடும். அந்த ஒருசிலரில் நானும் ஒருவன் என்பதை மகிழ்ச்சியோடும் பெருமையோடும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுமார் முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, நமது நாட்டில் விடுதலைப் போராட்டம் தீவிரமாக நடை பெற்றுக் கொண்டிருந்தபொழுது, திரு. ஜீவானந்தம் அவர்கள் உள்ளத்தில் பொங்கியெழுந்த உணர்ச்சிகள், கவிதைகளாக உருக்கொண்டு பல மேடைகளில் ஒலி செய்தன; பலருடைய உள்ளத்தை அசைத்துக் கொடுத்தன. அவற்றுள் சில இந் நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

இடம் பெற்றிருக்கிற கவிதைகளில் பெரும்பாலானவை தொழிலாளி வர்க்கத்தையும், சமதர்ம சித்தாந்தத்தையும் மையமாகக் கொண்டு எழுந்தவை. இவை தவிர, வேறு சில வற்றையும் மையங்களாக அமைத்துக்கொண்டு கவிதைகள் புனையும் ஆற்றல் திரு. ஜீவானந்தம் அவர்களுக்கு உண்டு என்பது எனக்கு நன்கு தெரியும். அந்த ஆற்றலும் விரைவில் வெளியிடப்பட வேண்டுமென்பது என் விருப்பம்.

இந்த நூலிலுள்ள பாக்களைப் பற்றிக் கருத்து வேறு பாடுகள் இருக்கலாம். ஆனால் எந்த உள்ளத்திலிருந்து இவை எழுந்தனவோ அந்த உள்ளத்தைப் பற்றிக் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. அந்த உள்ளம், தியாகத் தீயில் புடமிடப் பெற்று, தூய்மையடைந்தது, எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது; பர நலத்தில் தன்னலம் காணுந் தன்மையது. இத்தகைய உள்ளப்பாங்குகள் நாட்டிலே வளர வேண்டுமென்பது என் பிரார்த்தனை.

1–8–62
சென்னை

வெ. சாமிநாதன்

# முன்னுரை

இந் நூலின்கண் வெளியிடப் பெற்றிருக்கும் ஜீவாவின் பாடல்கள் 1932—45க்கு இடைப்பட்ட ஆண்டுகளில் எழுதப்பட்டவை. எனவே அவை அக்காலத்தின் வரலாற்றுக் குரலை எதிரொலிக்கின்றன என்று சொல்வது சரி, எனினும் அது முற்றுண்மையாகி விடாது பாரதி யுகத்தில், பாரதி வழி வந்து, 1924-ம் ஆண்டில் பாரதி புகழுடம்பு கொண்டதின் பின், பாரதியின் ஆதர்சங்களைப் பின்பற்றி நாட்டின் உலகின் வளர்ச்சிப் போக்குகளுக்கேற்ப அவற்றை வளர்த்து, செழுமை கூட்டிச் செம்மை நிறைத்த வரலாற்றிற்கும், அவ்வரலாறு நிகழ்த்திய பணிக்கும் மெய்யுருவாய்த் திகழ்வன அவை எனச் சாற்றுவதே பொருத்தமாகும்.

அரசியல் பொருளாதாரத் துறையில் மட்டுமல்ல புரட்சி; சமூகத் துறையிலும் புரட்சி வேண்டும், இலக்கியத் துறையிலும் புரட்சி வேண்டும், பண்பாட்டுத் துறையிலும் புரட்சி வேண்டும், பிற்போக்குச் சனாதனம் ஒழிய வேண்டும் என்று "மகாகவி பாரதியார்" எனும் தமது நூலின் முன்னுரையில் வ. ரா. அவர்கள் படைத்த கருத்து சாகாவரம் பெற்ற கருத்தாகும். அக் கருத்தின் வாய்மையைத் தமிழர்-இந்தியர் சமுதாயத்தின் வரலாற்று வளர்ச்சி மெய்ப்பித்துள்ளது. எனவே, இக் கருத்தினையும் வளர்ச்சியினையும் போற்றி இருபதாம் நூற்றாண்டின் தமிழ்க் கவிதையுலகில் சனித்த சால்பு நிறைக் கவிதைகள் அனைத்தும் மெய் மெய் என்று சான்று பகர்வதில் சற்றேனும் வியப்படையக் காரணமில்லை.

முதல் உலகப் போரைத் தொடர்ந்து வெடித்த ருஷ்ய பொதுவுடைமைப் புரட்சி; இந்திய விடுதலை இயக்கம்; இலக்கிய-பண்பாட்டு மறுமலர்ச்சி; 1929—33 காலத்திய உலகப் பொருளாதார நெருக்கடியினின்று பிறந்த பொருளாதாரச் சீரழிவு அரசியல் தீவிரம், தொழிற்சங்க இயக்கம் போன்ற பன்முக மக்கள் இயக்கங்கள், சோஷலிஸ்ட் இயக்கம்; இவ்வியக்கங்களின் தோற்றத்திற்கு நல்லுரமாய் அமைந்த தத்துவச் சர்ச்சைகள், கட்சி மோதல்கள்; இவற்றிற்கெல்லாம் உயிரும் உடம்புமாகக் காட்சியளிப்பதே ஜீவாவின் பாடல்களின் தனிச்சிறப்பாகும். இவ்விழிக் கோணத்திலே பார்த்தால், ஜீவாவின் பாடல்கள் தமிழ்க் கவிதைச் சமூகத்தில் ஒரு இன்றியமையாத, பிரிக்க வொண்ணாத, உயிர்ப்புள்ள, நவீனப் பகுதியாயமைந்திருப்பதைத் தமிழிலக்கியவாதிகள் ஓர்ந்து தேர்ந்து கொள்வர் என்பது உறுதி.

இவ்வுண்மையை ஓர்ந்து தெளியும் போக்கிலே தமிழ் மக்கள் மேலும் சில சிறப்பியல்புகள் ஜீவாவின் பாடல்களிலே பொதிந்திருக்கக் காண்பார்கள்.

பாரத நாட்டின் பிற பகுதிகளில் சமூகச் சீர்திருத்த இயக்கம் முந்தி உதிக்க, விடுதலை இயக்கம் பிந்தி உதித்து உருக்கொண்டது. தமிழகத்திலோ எனில் இரண்டும் ஒரே காலத்தில் உதித்து ஒன்றுபிணைந்த இயக்கமாக வளர்ந்தன; ஒன்றுக்கொன்று பலம் கூட்டிக்கொண்டு வளர்ந்தன. 19-ம் நூற்றாண்டின் முப்பதுகள்—நாற்பதுகளைத் தொடர்ந்து வங்கத்திலே ராஜாராம் மோஹன்ராய், வித்தியாசாகரர், விவேகானந்தர் கருத்தொளியிலே சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் பிறந்துவிட்டன; வடக்குப் பகுதியிலே ஆரிய சமாஜம், பிரார்த்தனா சமாஜம் போன்ற இயக்கங்கள் தோன்றிவிட்டன; ஆந்திர நாட்டில் குரஜாட அப்பாராவ், வீரேசலிங்கம் பந்துலு வழியிலே சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் பரவி விட்டன. கேரள நாட்டில் புனிதர் நாராயண குரு அவர்களின் வழியிலே சமூகச்

சீர்திருத்த இயக்கம் பற்றிக்கொண்டது. மராத்திய நாட்டிலும் அப்படியே. இவற்றைப் பின்தொடர்ந்துதான் இந்திய தேசிய விடுதலை இயக்கம் உருக்கொள்ளத் துவங்குகிறது. தமிழ் நாட்டிலோ? 19-ம் நூற்றுண்டின் முப்பதுகளில் அருட்சோதி வள்ளலாரின் சொல்லும் தொண்டும் நிகழ்த்திய சலசலப்புக்குப் பின்—கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தனர் திவ்ய சரித்திரக் கீர்த்தனைகள் விளைந்த சலனத்திற்குப்பின்—தாயுமானவர் பாடல்களின் கொண்டு ஏற்படுத்திய மன அசைவுகளுக்குப்பின்—சீர்திருத்த இயக்கம் வற்றிய நதியாக மறைந்து, தமிழ் நாட்டை மீண்டும் ஒரு பேரிருள் கவ்விக் கொள்கிறது. தேசிய விடுதலை இயக்கம் உருப்பெற்ற பிறகுதான், சமூக சீர்திருத்த இயக்கத்தையும் விடுதலை இயக்கத்தையும் பிற மறுமலர்ச்சி இயக்கங்களையும் ஒன்றாய்த் தொகுத்து முழுப் பார்வையளித்து மக்கள் இயக்கமாக வளர்க்கும் தொண்டினை பாரதிக் கவிதை மேற்கொள்கிறது. பாரதியார் முதன் முதலாகத் தமிழனின் சிந்தனையையும் உணர்ச்சியையும் செயலையும் ஒருமுகப் படுத்தும் கூட்டுமையை (Synthesis)ச் சாதிக்கிறார். இச்சாதனையிலே வரலாற்றின் தவிர்க்க முடியாத தன்மை அடங்கியிருப்பதினலேதான் பாரதிக்குப் பின்னர் வந்த கவிஞர் பெருமக்கள் அனைவரும் இவ்விதியைப் பின்பற்றுமலிருக்க முடியவில்லை. ஜீவா அவர்களின் பாடல்கள் இவ்விதிக்கு உளப்பூர்வமாக உட்பட்டு, பாரதி ஒளியிலே நின்று, இசைக்கிற அனுபவம் தமிழனுக்கு ஒரு பேரனுபவமேயாகும்.

பாரதியின் புதிய ஒளியோடு நின்றுவிடவில்லை ஜீவா. குருவுக்கு மிஞ்சிய சீடனுனர்—அந்தச் சொற்களின் சிறந்த பொருளிலே அப்படிச் சொல்கிறேம். அப்பன் தேடிவைத்த சொத்தை அனுபவிப்பதிலே மகனுக்குப் பெருமையில்லை; அதைப் பெருக்குவதுதான் அவனுக்குப் பெருமை. குருவிடம் பெற்ற போதத்தை நெட்டுரு செய்தோ, அப்படியே பின்பற்றி யொழுகுதோ மட்டும் சீடனுக்குப் பெருமையாகாது. தான்பெற்ற போதத்தைத் தனது காலத் தேவைகளுக்கேற்ப வளர்த்துப் புதுக்கி வருங்காலச் சந்ததியர்க்கு

விடுச் செல்லும் ஞான குருவாகத் தன்முறைக்கு ஆவதே சீடனுக்குப் பெருமையாம். பாரதியின் கூட்டுமை ஒளியிலே வந்த ஜீவா, தன் முறைக்கு ஒரு புதிய கூட்டுமையைச் சுணித்துத் தந்திருக்கிறார் என்று சொல்வது மிகையாகாது. ஜீவா பாடல்களே அதற்குத் தக்க சான்றாக விளங்குவன.

ஆன்மீகவாதத்தை அடிப்படையாகக் கொண்ட பாரதியாரின் கூட்டுமை தன் காலத்தில் மக்கள் உள்ளங்களிலே ஒளியும் உணர்வும் ஊட்டிச் செயல்புரியத் தூண்டியது உண்மையேயெனினும், பிற்காலத்தில் அவ்வழியில் வந்த வர்கள் வழி தடுமாறுவதும் வழி தவறிச் செல்வதும், தமிழினம் கண்கூடாகக் கண்ட மற்றொரு உண்மையாகும். இதற்குக் காரணம் ஆன்மீக வாதத்தின் தாழ்வும் பலவீனமுமேயாம். ஜீவாவின் கூட்டுமை நவீன லோகாயத வாதத்தை அடிப்படையாகக் கொண்டது. வேறெதற்கும் தன்னை ஒப்புக் கொடுக்காமல் மனித உலகுக்கும் இயற்கை உலகுக்கும் மட்டுமே தன்னை முழுக்க ஒப்புக் கொடுத்து விடுகிற ஒரு பார்வையிலே அமைந்த கூட்டுமை ஜீவா சமைத்துள்ள கூட்டுமை. இந்தப் புதிய கூட்டுமை பாரதியாரோடு தோள் சேர்த்து வழி நடக்கையிலேயே பாரதியாரோடு வேறுபட்ட ஒரு தனி நடையில் செல்வதைத் தமிழன்பர்கள் காண்பார்கள். ''மனிதனே எல்லாம்; மனிதனுக்கே எல்லாம்'' என்கிற உலகளந்த பார்வையே ஜீவாவின் கூட்டுமையில் கேட்கும் அடிநாதமாகும். ''வேதம் புதுமை செய்'' ''தம்பி, புதிய புதிய உண்மைகளைத் தேடு'' என்ற தனது குருவாகிய பாரதியாரின் ஆணைக்கேற்ப ஜீவா நடந்துகொண்டு தனது குரு பக்தியை மெய்ப்பித்த இந்தக் காட்சி ஒவ்வொரு தமிழனின் உள்ளத்தையும் அள்ளும்; உருக்கிவிடும்.

பிஜித் தீவிலே இந்தியப் பெண்கள் படும்பாட்டை பாரதியார் கவிதை உள்ளம் உருகச் சித்திரிக்கிறது; ''காலுக்குச் செருப்புமில்லை'' என்கிற கவிதையிலே ஜீவா இந்தியப் பாட்டாளிக் குடும்பத்தின் அவலநிலையைச்

சித்தரிக்கிறார்; ''தனியொருவனுக் குணவில்லையெனில் ஜெகத்தினை யழித்திடுவோம்'' என்று இடிபோசையென இசைக்கிறார் பாரதியார். ''சொல்லும் 'நா' சமதர்மமே'' என்ற பாடலில் ஜீவா பாரதியின் சபதத்தைத் தத்துவ உணர்வோடு ஏற்றுக்கொண்டு பாடித் துதிக்கிறார். ''நெஞ்சு பொறுக்குதில்லையே'' என்கிற பாரதியாரின் பாடலுக்கு எதிரொலியாக ஜீவாவின் ''கொள்ளைச் சிரிப்பு'' ''மிகவும் கெட்டோம்'' கேட்கிறது. பாரதியாரின் பெண் விடுதலைக் கும்மிக்கு ஈடாக ஜீவாவின் பெண் விடுதலைப் பாடல்கள் இசைக்கின்றன. பாரதியின் ''தாயின் மணிக் கொடிக்கு'' வலிமையும் போதமும் கூட்டும் முறையிலே ஜீவாவின் செங்கொடிப் பாடல்கள் முழங்குகின்றன. இப்படியே சொல்லிக்கொண்டு போகலாம்.

பொருள் துறையில் மட்டுமன்றி, கவிதை உருவம், சொல் நடைத் துறைகளிலும் பாரதியாரை ஜீவா தமது கலங்கரை விளக்கமாகக் கொண்டுள்ளார். ''எளிய சந்தம், புதிய பொருள், புதிய உவமைகள், எளிய சொற்கள்'' என்று பாரதியார் கட்டளையிட்ட வழியிலே—''நாட்டு நெசவு'' பாணியிலே கவிதை நெய் என்று பாரதியார் சொன்ன பாணியிலே—ஜீவா சென்றுள்ளார். வரலாற்றில் தமிழ்க்கவிதை சாதித்த அற்புதங்களையெல்லாம் ஜீவா தன்வயமாக்கிக் கொண்டுள்ளார். தேவாரப் பண்ணிலிருந்து நொண்டிச்சிந்து வரை; கர்நாடகராகக் கீர்த்தனை பாணியிலிருந்து கிளிக்கண்ணி வரை; விருத்தப்பாவிலிருந்து கட்டபொம்மன் மெட்டு வரை; எல்லாக் கவிதை-பாடல் உருவங்களையும் ஆட்சிகொண்டு புதிய படையல்களை ஜீவா தமிழகத்திற்கு வழங்கியுள்ளார். தேவாரப் பண்ணிலே ''சொல்லும் நா நமச்சிவாயவே'' என்கிற தேவாரப் பாடலை மனமுருகப் பாடிவிட்டு ஜீவாவின ''சொல்லும் நா சமதர்மமே'' என்ற பாடலை மறுமூச்சில் பாடும்போது அதே உள்ளக்கனிவும் மெய்சிலிர்ப்பும் நம்மிடையே பரவிப் பாயக் காண்கையில் ஜீவா அவர்களின் பேராற்றலுக்குச் சான்று கிடைத்து விடுகிறது. இலக்கியத் துறையிலும் ஜீவா

அவர்கள் தமிழ்க் கவிதையின் பாரம்பரியத்தைக் காத்து வளர்க்க வந்த நல்ல வாரிசாகவே காட்சியளிக்கிறார்.

ஒரு நல்ல கவிதை அல்லது பாடலைக் கேட்கும்போது அதன் உள்ளடக்கத்தின் சிறப்பினாலோ உருவ அமைதியின் சிறப்பினாலோ சென்ற காலத்தை எட்டிப்பார்த்து விட்டுத் திரும்புகிற ஒரு உணர்ச்சியே உண்டாகும். அதுவே அது நல் கவிதை என்பதற்கும் ஒரு இலக்கணமாகும். அதே பொழுதில், நிகழ்கால நடப்பில் இரண்டு கால்களையும் நன்றாகப் பதித்து நிற்கும் ஒரு அனுபவ உணர்ச்சியும், எதிர் கால கதி இப்படியாக வேண்டுமே என்கிற உள் வேட்கையின் சித்திரமும், தொனி செய்வதும் நல்ல கவிதைக்குரிய பிற இலக்கணங்களாம். ஜீவாவின் பாடல்களில் இவ் உணர்ச்சி அநுபவத்திற்கு—முக்காலமும் அறியும் உணர்வுக்கு—பங்கமேற்படுவதற்கு மாறாக நிறைவுதான் ஏற்படுகின்றது. எனவேதான் இந்தப் பாடல்களை அன்றுபோல் இன்றும், இன்றுபோல் என்றும், பாடிக் கொண்டேயிருக்கலாம்.

பாடிக்கொண்டே யிருப்பது மட்டுமல்ல; அவற்றின் ஒளியிலே நின்று செயல்படவும் செய்யலாம், செயல்படவும் வேண்டும். ஜீவா அவர்கள் காட்டிய புதிய கூட்டுமையின் ஒளியிலே இந்திய விடுதலையைப் பேணல், சமூகச் சீர்திருத்த இயக்கத்தையும் சம முக்கியத்துவத்தோடு நடத்துதல், பொதுவுடைமைப் பிரச்சாரம் செய்தல், மொழிப்பற்று வளர்த்தல், பண்பாட்டுச் செல்வத்தைப் பேணி வளர்த்துப் பதமை செய்தல், சமாதானத்தை அரண்செய்தல், சாதிமத சழக்குகளை விலக்கல் போன்ற பணிகளை ஒருங்கே ஒருமுகமாக ஆற்றத் துணிவு கொள்ளவேண்டும்.

நாஞ்சில் நாட்டுச் செம்மண்ணும் தமிழ் மண்ணில் பிறந்து தமிழகத்தின் சென்னியாம் சென்னையிலே மக்களும் கடலும் காற்றும் சுடற்கரை பூண்ணும் முதன் முதலாக எதிரொலித்த பாரதியின் "பாரத சமுதாயம்" பாடலைச் செயலில் காணத் தூண்டும் திருத்தொண்டனாய் வாழ்ந்து,

உடலுக்கும் உள்ளத்திற்கும் ஒருங்கே நலங்கூடும் தென்பாண்டிக் குற்றால அருவிபோல் தம் கவிதை யருவியால் தமிழுக்கும் தமிழனுக்கும் நலம் பெருக்கி நல்வினை புந்து வரும் ஜீவா அவர்கள் நீடூழி வாழ்க! அவர்தம் நிலையன தொண்டு நெடிது வளர்க! என்று தமிழ் மக்கள் நிறை நெஞ்சோடு போற்றுவார்கள் என்பது உறுதி.

*14—8—62*
சென்னை

**ஆர். கே. கண்ணன்**

# சமதரும உலகம்

இந்தப் பாட்டு 1935-ம் ஆண்டில் தீட்டியது. ஓய்வு ஒழுற்றச் சமதர்மப் பிரச்சாரம் ஒருபுறம், கிடைத்த சம தர் இலக்கியங்களையெல்லாம் படிப்பது மறுபுறம்; இந்தப் பேக்கு வாழ்க்கையை அடக்கியாண்ட காலத்தில் முளைத் தெந்த பாட்டு இது.

சோவியத் அன்பரான மோரஸ் ஹிந்தஸ் (Morus Hindus) என அமெரிக்க அறிஞர் எழுதிய 'வேரோடு பிடுங்கி யெியப்பட்ட மனித வர்க்கம்' என்ற நூலில் கண்ட சில கருதுக்களை இந்தப் பாட்டு வடித்தெடுத்திருக்கிறது.

இன்றுகூட—உலகம் முழுவதும் நடைமுறையில், திட்ட வட்டமாக சமதர்மக் கொள்கையின் கை மேலோங்கி விட்ட இன்றுகூட—கண்டதற்கெல்லாம், தோன்றியதற்கெல்லாம் சமர்மம் என்று பெயர் சூட்டப்படுகிறதென்றால், 27ஆண்டு களுக்கு முன்னர் சமதர்மத்தைப் பற்றி எவ்வளவு குழப் படியும் அறியாமையும் இருந்திருக்குமென்று சிந்தித்துப் பாருங்கள்! அந்தச் சூழ்நிலையில் பாட்டில் விரவி நிற்கும் சம தர்மத்தைப் பற்றிய சுருக்க விளக்கத்தை மதிப்பிட வேண்டும்.

## (விருத்தம்)

வரும்நமது சமதருமவையம் தன்னில்
வாழ்வுண்டு இன்பமுண்டு வளர்ச்சி யுண்டு
பெரும்தொழில்செய் எப்பொருளும் பொதுவில்
மாறும்
பிறர்கொழுக்கத் தொழிலாளர் வாட மாட்டார்

ஒருவனை ஏய்த் தொருவன்உண்ணும் கொகை
சதம்
உறுதொழிலில் உ ற்பத்தியில் குழப்ப மில்லை
இருநிலத்தில் எண்டிசையும் வளமை துள்ளும்
எழுதோழா எழுதோழா எழுவாய் இன்றே!

2

வரும்நமது சமதரும வையம் தன்னில்
வருத்திஅரித் திடுகின்ற வறுமை இல்லை
பெருவாரி யின் நடுவில் காணும் இன்மைப்
பேச்சில்லை தனிஉடைமைப் பித்தம் இல்லை
பொருளாதா ரத்தில்சம உரிமை ஓங்கும்
புதுமைவிஞ்ஞா னச்செழுமை சமக மக்கும்
இருபாலார் சரிநிகராய் வாழ்வர் திண்ணம்
எழுதோழா எழுதோழா எழுவாய் இன்றே!

3

வரும்நமது சமதரும வையம் தன்னில்
வர்த்தகத்தில் போட்டியில்லை யுத்த மில்லை
அரசியலில் தொழில்நாய கம்தான் மேவும்
அடிமையுடன் மடமைமதம் அற்று வீழும்
மருள் அகலும் தேசவெறி நிறபே தம்போம்
மனிதசமா ஜம்மலரும் புனித வாழ்வாம்
இருளகல ஞானஒளி எங்கும் வீசும்
எழுதோழா எழுதோழா எழுவாய் இன்றே!

# காலுக்குச் செருப்பும் இல்லை

**கோ**வை ''ஸ்டேன்ஸ் மில்லில்'' வேலைநிறுத்தம் அன்று நெருங்குகிறது. காலை 6மணிக்குத் தொழிலாளர் கூட்டம் நடைபெறப் போகிறது. 5மணிக்கு ஆக்கப்பட்டு இந்தப் பாடு அந்தக் கூட்டத்தில் பாடப்பட்டது. இந்த நிகழ்ச்சி 193-ல் நிகழ்ந்தது.

1935 லிருந்து 1939 வரை தமிழகத்தில் எல்லா மாவட்டங்களிலும் விழிப்புற்ற தொழிலாளர்கள், விவசாயிகள், சமதர்ம உணர்வும் ஏகாதிபத்திய எதிர்ப்பும் கொண்ட பொதுமக்கள் ஆகியவர்களிடையில் இந்தப் பாடு பாடப்படாத இடமே கிடையாது. தொழிலாளர் கூட்டங்களிலும், சோஷலிஸ்ட் கூட்டங்களிலும், ஏன், அன்று காங்ரஸ் கூட்டங்களில்கூட இந்தப் பாட்டுக்கு ஏற்பட்டிருந்த மவுசு வேறு எந்தப் பாட்டிற்கும் கிடையாது.

தொழிலாளர் போராட்டத்தின் உரிமைக் குரலாக இந்தப் பாட்டு எதிரொலித்தது. கோவை, மதுரை, சென்னை, பொன்மலை போன்ற நகரங்களில் பொன்னெழுத்தில் பொறிக்கத்தக்க பல வீரப் போராட்டங்களை நடத்தத் தொழிலாளிப் பெருமக்களுக்கும், முன்னணி வீரர்களுக்கும் ஊக்கத்தையும், உணர்ச்சிப் பெருக்கையும் ஊட்டிய பாடல் இது.

ஒரு சந்தர்ப்பத்தில் ஈரோட்டில் ராஜாஜி கூட்டத்தில், தமிழமுதைப் பாடல் மழையாகப் பொழியும் இசைச் செல்வி கே.பி. சுந்தராம்பாள் பாடிக்கொண்டிருந்த பொழுது கூட்டத்திலிருந்த ஆயிரக்கணக்கான பொது மக்கள்,

''நிறுத்து! கோவை இராமதாஸ் 'காலுக்குச் செருப்புமில்லை' பாடட்டும்'' என்று விரும்பிக் கேட்டுப் பாடவைத்த பாட்டு இது.

அன்று— நினைவிருக்கட்டும்— இத்தகைய பாடல்களைக் கேட்க வசதிக்காரர்களும், அதிகாரம் படைத்தவர்களும் குடல் நடுங்கிய அன்று—இசைத்தட்டில் இடம் பற்ற பாட்டு இது.

பாரதியின் தலைசிறந்த மெய்யன்பரும், தமிழருக்கும் தமிழுக்கும் புத்துயிரும், புத்தொளியும் அளித்த தமிழ் மக்கள் மறுக்கக் கூடாத எழுத்துக் கலைஞருமாகிய திரு. . ரா. இந்தப் பாட்டை கோவை எம். ஆர். இராமதாஸ் பாடக் கேட்டார். உணர்ச்சிப் பெருக்கோடு தாரை தாரையாக அழுதார். பின்னர் ஒருகால் இந்தப் பாட்டின் ஆசிரியரைச் சந்தித்தபொழுது, அவரை ஆரத் தழுவிக் கட்டிப் பிடித்துக் கொண்டு, ''உங்களுடைய பேச்சுவன்மையைத் தமிழகம் கேட்டுவிட்டது; தியாகத்தையும் தமிழகம் நன்கு அறியும்; நீங்கள் பிரச்சாரங்களிலும், போராட்டங்களிலும் ஈடுபடுவதை நிறுத்தி, தயவு செய்து, தமிழன் நன்மையடையும் பொருட்டு உங்கள் உணர்ச்சிகளைப் பாடல்களாக எழுதி எழுதித் தள்ளுங்கள்'' என்று நட்புரிமையோடும், அன்புரிமையோடும் வற்புறுத்தினர். இவ்வாறு கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்ச் சிறந்த எதிரொலிகளைத் தமிழன்பர்களிடமும், தேசபக்தர்களிடமும், முற்போக்குக் கலைஞர்களிடமும் உண்டு பண்ணிய பாடல் இது.

> பாலின்றிப் பிள்ளை அழும்
> பட்டினியால் தாயழுவாள்
> வேலையின்றி நாம் அழுவோம்-தோழனே
> வீடுமுச்சூடும் அழும்

என்ற அடியை உணர்ச்சி மயமாக நின்று உச்சஸ்தாயியில் இராமதாஸ் பாடியபொழுது எத்தனையோ தடவை கூட்டத்திலிருந்தோர் பொலபொலவென்று கண்ணீர்

உதிர்த்தையும் நாம் பார்த்திருக்கிறோம். இவ்வாறு உள்த்தை வெல்லமாக உருக்கவல்ல பாட்டு இது.

காலுக்குச் செருப்பு மில்லை
காவயிற்றுக் கூழுமில்லை
பாடுக் குழைத்தோ மடா-என் தோழனே
பணயற்றுப் போனோ மடா. (காலுக்கு)

குண்டிக்கொரு துண்டு மில்லை
செல்வறுமை தாள வில்லை
ஒண்டக் குடிசை யில்லை-என் தோழனே
உழைத்திளைத்துப் போனோ மடா. (காலுக்கு)

நேர்நொடிகள் வெம்புலி போல்
நூறுவிதம் சீறு வதால்
தாய்தந்தையர் பெண்டு பிள்ளை—என் தோழனே
சாய்ந்து விழக் கண்டோமடா. (காலுக்கு)

பாலின்றிப் பிள்ளை அழும்
பட்டினியால் தாய ழுவாள்
வேலையின்றி நாம ழுவோம்-என் தோழனே
வீடுமுச் சூடும் அழும். (காலுக்கு)

கையிலொரு காசு மில்லை
கடனெகொடுப் பாரு மில்லை
செய்யும்தொழில் கிட்ட வில்லை-என் தோழனே
திண்டாட்டம் கொல்லுதடா. (காலுக்கு)

வாங்கிய கடன் தீர்க்க
வக்கில்லை யானு லும்
ஏங்கி யிரந்துண்ண வோ-என் தோழனே
எங்கள் மனம் கூசுதடா. (காலுக்கு)

கொச்சைப் பிழைப்பறி யோம்
கொலை திருட்டும் அறியோம்
இச்சகப் பேச்சறி யோம்—என் தோழனே
எத்தும் புரட்டறி யோம். (காலுக்)

கோணல் மாணல் திட்டங்களால்
கோடி கோடி யாய்க்குவித்தே
வீணர்சிலர் கொழுக்கக் கண்டால்-என் தோழனே
வெஞ்சினம் பொங்கு தடா. (காலுக்)

மாடமாளி கைகய வர்க்கு
மன்னர்மகு டமவர்க்கு
வாட வறுமை நமக்கு-என் தோழனே
வந்திடல் வாழ்வெ தற்கு. (காலுக்)

ஒன்றுபட்டுப் போர்புரிந் தே
உயர்த்துவோம் செங்கொ டியை
இன்றுடன் தீரு மடா-என் தோழனே
இம்சை முறைகளெல்லாம். (காலுக்)

# மூலதனம் பொது

•

லதனம்'' என்ற பெயரால் ஒரு மாத இதழ் தொ இருந்தோம். பின்னர் அது ''புது உலகம்'' என்ரயரால் 1935-ம் ஆண்டில் வெளிவந்தது. அந்தப் பத்தியின் முதல் இதழில் வெளிவந்த பாடல் இந்தப் பாட

ழர் சமதர்மத் தலைவர் சிங்காரவேலரின் கருத் தோம், சுயமரியாதை இயக்கம், சென்னை தொழிலாளர் பாதுபுக் கழகம்—இவற்றிற்கெல்லாம் இப்பாடலை உருகியதில் முதலிடம் உண்டு.

 உலகத்தில் வெளிவந்த 'எது முக்கியம்' என்ற கட்டயும் இப்பாடலுக்கு ஒரு விளக்கம் தருவதாயிருக்கும்.

லதனம் பொதுவே—தொழில் முறை
யற்சிகளும் பொதுவே
நாலமுற்றும் பொதுவே-தொழில் முறை
ாட்டும் இன்பலோகம்
ாலநிலை உணர்ந்தோர்—மேதையர்
ட்சிக் கொள்கை இதுவே
ாலைநில வாழ்வு—தழைத்திடும்
பைம்பூஞ் சோலை என்ன.

2

சொத்துரிமைச் சீக்கு—செய்கேடு
சொல்லும் தரத்ததுவோ
பித்த மனிதரைப் போல்—உலகினி
பேயாட்ட மாடுதன்றோ
சுத்தஅநி யாயம்—கொடுங்கோல்
சோம்பல், யுத்தம், வறுமை
எத்தும்பிழைப்பு அடிமை—தனிஉடை
ஈன்ற நச்சுச் சிசுக்கள்.

3

மாந்தர் விலங்குகளோ—கழுகுபோல்
வதைத்திழுத் துண்ணுகிறார்
ஓந்திபோல் வேஷத்திலே-அட்டைபே
உறிஞ்சுறார் உதிரம்
சாந்தம் பசுப்போல-சூழ்ச்சியில்
சதிகளில் நரிவெட்கும்
சோர்ந்திடும் தேவாங்காய்-பவிசிலும்
*சுணங்கனில் தாழ்கின்றார்.

4

கடவுளும் காக்கவில்லை-நீதிசொல்
கவர்மெண்டும் காக்கவில்லை
படைகளும் காக்கவில்லை-பாழ்மதப்
பத்தியும் காக்கவில்லை
குடுகுடு கிழமான-பழமையைக்
கும்பிட்டபலன் இதுதான்
உடைந்த மனத்திற் கிங்கே-வழியினி
ஒன்றே சமதர்மம்.

---

*சுணங்கன்-நாய்.

5

புழுக்களுக்கே– வாழ்வினில்
பதில் கவலையுண்டோ?
சகள் ஈட்டியதோர்-தேட்டையை
புற உண்ணலையோ
மனிதர்வாழ-உழைப்பவர்
ச் சகிப்பதுவோ ?
க போர்முரசு- நாட்டுக
ப் பொது உடைமை.

# புரட்சி வேண்டும்

இந்தப் பாட்டு 1935-ல் எழுந்தது. பொதுவுடைமை
கருத்துக்களைப் பல கோணங்களிலிருந்தும் பகுதி ம
களுக்கும் பலவாருகவும் சொல்ல வேண்டுமென்ற வே
கையும், தேவையும் மிகுந்திருந்த கால எழுந்
பாட்டு இது.

அன்று மக்களிடம் மிகப் பரவிக்கிடந்த ஒரைப்பட
பண்ணின் அடியொற்றிப் பிறந்த பாடல் இது

**பல்லவி**

பொதுவுடைமை பெறவேண்டும்—உட
புரட்சிசெய்திட வேண்டும்
வேறென்ன வேண்டும். (பொது

**அனுபல்லவி**

புதியஜீவித முறவேண்டும்-உறுவதற்கு
பொருளாதிக்கம் அகலவேண்டும்
வேறென்ன வேண்டும். (பொது

**சரணங்கள்**

நோயும், பசியும், மக்கள் சாவும் பெருகுதோ
தேவைநிறைவு பெறவேண்டும்
வேறென்ன வேண்டும். பொது

தேனடை ஈக்களொப்பார் செகத்தினர் ஆகையாலே
ஈனப்பணப் பித்தற வேண்டும்
வேறென்ன வேண்டும். (பொது)

ஆயிரங் காலவிஷம் ஆகும் தனிஉடைமை
சாயும்ஓர் வழிகோல வேண்டும்
வேறென்ன வேண்டும். (பொது)



# சொல்லும் 'நா' சமதர்மமே

இந்தப் பாட்டு 1935-ல் தீட்டப்பட்டது. ஜீவாவை ஆசிரியராகக் கொண்டு ஜோலார்ப்பேட்டையிலிருந்து வெளி வந்த "சமத்துவம்" என்ற வார இதழில் வெளிவந்த பாட்டு இது.

அந்தக் காலத்தில் சமதர்ம மேடைகளிலும், தொழி லாளர் பொதுக்கூட்டங்களிலும் அதிகப்படியாகப் பாடப் பட்ட பாடல்களில் இதுவும் ஒன்று.

சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத்தில் "சொல்லும் நா நமச்சிவாயமே" என்று ஒரு பதிகம் பாடியுள்ளார். அதே பாணியில் "சொல்லும் நா சமதர்மமே" என்ற இந்தப் பாட்டுப் பாடப் பட்டது. அங்கு ஐந்தெழுத்துப்பற்று; இங்கு சமதர்மப்பற்று.

சென்னை மாகாண தீவிர இளைஞர் மாநாடு (Radical Youth Conference) 1935-ல் சென்னையில் நடைபெற்றது. அதற்கு பம்பாயிலிருந்து இரண்டு தலைவர்கள் வந்திருந் தார்கள். இன்று ஆந்திர கம்யூனிஸ்ட் தலைவராக விளங்கும் தோழர் சுந்தரய்யாவின், அவரது கூட்டாளிகளின் முன் முயற்சியிலும், முழு முயற்சியிலும் நடத்தப்பட்ட மாநாடு இது. இந்த மாநாட்டில் இந்தப் பாட்டை ஆக்கியவரே பாடும்படி வந்திருந்தவர்களால் வற்புறுத்தப் பட்டார். பாடினார். பம்பாய்த் தலைவர்கள் இன்னும் ஒருமுறை என்று விரும்பிக் கோரினர். இசைவளம் காரணமாகவல்ல; பாட்டின் உணர்ச்சிவசம் காரணமாக.

எத்தனையோ அணிவகுப்புகளில், பொதுக்கூட்டங்களில் இராமதாஸ் போன்ற குரல்வளமும், இசைவளமும் படைத்தவர்கள்பாட, ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் தேன்குடித்த நரிமாதிரிச் சொக்கியிருந்து இந்தப் பாட்டைக் கேட்டிருக்கிறார்கள்.

மற்றவர் எதைப் பேசினும் எங்கள்
கொள்கையே மனம் பற்றுவேன்
வெற்றுரை நிதம் வீணர் பேசினும்
வீரரை என்ன செய்திடும்
கற்றவர் புகழ்ந் தேத்தும் நல்வழி
காரல் மார்க்ஸின் அருங் கொடை
நற்றுணை அதை நான் மறக்கினும்
சொல்லு நா சமதர்மமே. (மற்றவர்)

கெட்டவர் சுக மற்றவர் துயர்
உற்றவர் முதல் யாவரும்
ஒட்டிய வயி றோடும் சாவதை
ஓர் கணமும் சகிக்கிலேன்
பட்டினி யெனும் பேச்சை மாய்த்தனர்
பாரினில் ரஷ்ய தேசத்தார்
நட்டதாலதை நான் மறக்கினும்
சொல்லு நா சமதர்மமே. (மற்றவர்)

எல்லையில் வீரர் எம்முயிர்த் தோழர்
ஈடில்லா லெனின் தன்வழி
வல்லவர் மெலிந் தோரை வாட்டிய
வம்பு தீர்த்த புதுமுறை

புல்லியர் எதிர்த் திட்ட போதிலும்
பொங்கி நாளும் வளர்கொள்கை
நல்லதாமதை நான் மறக்கினும்
சொல்லு நா சமதர்மமே. (மற்றவர்)

கோடியர் வாடி நிற்கையில் சிறு
கூட்டத்தார் தொந்தி நீளுதே
பாடி யாடியே வம்பர் வாழ்ந்திடப்
பஞ்சையர் மனம் வேகுதே
ஓடியே வரு வீர்கள் தோழரே
என்று சான்றவர் கூவுறா
நாடிடா ததை நான் மறக்கினும்
சொல்லு நா சமதர்மமே. (மற்றவர்)

# ஜன சமூகத் தேவை

இந்தப் பாட்டு 1935-ல் எழுதப்பட்டது. சமதர்மம் என்ற வார இதழில் வெளிவந்தது.

தீவிரமான சமதர்மப் பிரச்சாரத்தின் நடுவே பிரச்சாரத் தேவையில் பிறந்தது இந்தப் பாட்டு.

நெஞ்சில் ஈரமுள்ள, இன்றைய நிலைமையை உணர்ந்த, எந்தச் சோதரனும் சோதரியும் இந்தப் பாட்டை இசையும் உணர்ச்சியும் பொருந்தக்கேட்டு, கண்கலங்கி நீர்ச்சுரக்காது இருந்ததில்லை,

புத்தியுள்ள தோழர் ஒன்று கூடும்-புவி
புகழும் சமதர்மம் கொண்டாடும்
சத்தியனு சாரம் வேலைப் பாடும்-பலன்
ஜன சமூகத் தேவையும் நாடும். (புத்தி)

காற்று நீரில் வேற்றுமையும் ஏது? -பொருள்
காப்பதில் நுகர்வதில் ஏன் சூது?
மாற்றுவம் பொது விலே இப்போது- ஆதால்
மாந்தர்க்குறும் இன்பமே தப்பாது. (புத்தி)

உற்பத்தி அமோகமாம் பிரஸ்தாபம் -வயி
றொட்டியவர் கோடி பரி தாபம்
அற்பர் பணக்காரர் கொள்ளை லாபம்- நிதம்
அடிப்ப தந்தோ கொடுமை பாபம். (புத்தி)

நாயுடனே எச்சில் தின்கின் றரே - மக்கள்
நாளும் கஞ்சிக்காய் இரக்கின் றரே
நோயும் பசியும் கொண்டோய்கின்றரே - போதும்
நொந்த வாழ்வு இன்றே தடுப்பீரே. (புத்தி)

ஒருமுழக் கந்த லற்றோர் கோடி - நாட்டில்
ஒண்ட நிழல் அற்றுநிற்போர் கோடி
வரும் துயரால் மடிவோர் கோடி - இங்கு
வறுமை நிலவுதே கூத்தாடி. (புத்தி)

சாமிகள் மதங்கள் இருந்தென்ன ? - ஒரு
சர்க்காரும் மலைபோல் இருந்தென்ன ?
பூமியை உருட்டு வதாய்ச் சொன்ன - மத
போதனைச் சட்டங்கள் இருந் தென்ன. (புத்தி)

போலிகளைக் காறி உமிழ் வீரே - நேர்மை
பொருந்தி உழைக்க வரு வீரே
ஆல்அரசு போலத் தழைப் பீரே - போர்
அறிந் தலைகள் போல் எழுவீரே. (புத்தி)

# கொள்கைப் பிடிப்பு

இந்தப் பாட்டு 1934-ம் ஆண்டு இறுதியில் பிறந்தது. கொள்கை வீரனுன காதலன், அன்பின் வடிவான தனது காதலிக்குக் கொள்கைப் பிடிப்பின் தன்மையை மிகத் திறம்பட, ஆணித்தரமாக எடுத்துக் கூறும் பாடல் இது.

தொழிலாளர் உரிமைக்காகவும், ஏகாதிபத்திய எதிர்ப்பிற்காகவும், சமதர்ம முழக்கத்திற்காகவும், பற்பல பழிப்புக்கும் இழிப்புக்கும், துப்பாக்கிப்பிரயோகத்திற்கும் கொடிய மரணத்திற்கும் இரையாக வேண்டியிருந்த அந்த நாட்களில், பலப்பல வீரர்களை, காதலிகளின் கல்லையும்கரைக்கும் கனிவுமிக்க இடைவிடா வேண்டுகோள்களில், கொள்கைப் பிடிப்புத் தளர்ந்து போகாது தடுத்தாட்கொண்ட பாட்டு இது. பின்னர் இது 'ஜனசக்தி'யிலும் வெளிவந்தது.

காதற் கனிரசமே-எந்தன்
கண்மணியே பூங்குயிலே
சாதலும் கற்கண்டடி-சம
தர்மயுத்த வீரன்என்றே (காதற்)

அச்சம் அவநம்பிக்கை-பழிப்
பார்ந்தசுய நன்மையெல்லாம்
துச்சமாய்த் தள்வோமடி-வீரம்
சூழ்துணிவு கொள்வோமடி (காதற்)

உற்ருர் உறவினர்கள்-சொந்த
ஊர்ஜனங்கள் நேசர்களும்
கற்ருரும் தூற்றினுலும்-கொள்கை
கைவிடுவ தெண்ணேமடி (காதற்)

ஆருயிரே பெற்றெடுத்த-தந்தை
அன்னைமனம் கோணினும்
சீரிய தோழர்களும்-ஓர்கால்
சீறினும் மனம்தளரோம் (காதற்)

தூங்கிடோம் பசிபொறுப்போம்-சிறைத்
துன்பமெதையும் சகிப்போம்
ஏங்கா துழைப்போமடி-பூவில்
இன்பசம தர்மத்திற்கே (காதற்)

தூக்குமேடை ஏறத்தயார்-சுடும்
துப்பாக்கிமுன் நிற்கத்தயார்-எங்கள்
நோக்கம்நிறை வேறுதற்கே-எந்த
நோன்புகொண்டி டவும்தயார். (காதற்)

# சமதர்மம்

(காமி சத்யபாமா கதவைத் திறவாய் என்ற மெட்டு)

## பல்லவி

ஓங்கும் சமதர்மம் உகப்பீர் தோழரே
தோழரே, தோழரே, தோழரே-நிதம் (ஓங்கும்)

## சரணங்கள்

1. ஈங்கு மாந்தருத்வேகம் இதுவாற் பயனமோகம்
பாங்குடன் பற்றி மகிழ்வீர்
மகிழ்வீர் மகிழ்வீர் மகிழ்வீர்-நிதம் (ஓங்கும்)

2. உரிமை கடமைசமம் ஓம்பும் ஆட்சி உத்தமம்
சரிநிகர் வாழ்வு தருமே
தருமே தருமே தருமே-நிதம் (ஓங்கும்)

3. இனிமை உடைமை யென்னும் ஏற்றத்தாழ்வினைத் தின்னும்
தனிமை வளர்க்கும் நெறியே
நெறியே நெறியே நெறியே-நிதம் (ஓங்கும்)

4. செய்வினை பொருளந்த தேசத்தின் பொதுவென்ற
உய்வழி கொண்டு பகுப்பீர்
பகுப்பீர் பகுப்பீர் பகுப்பீர்-நிதம் (ஓங்கும்)

5. பாடுபடுவோர் நாளும் பலனையடைந்து வாழும்
நாடு செழிக்கும் உறுதி
உறுதி உறுதி உறுதி-நிதம் (ஓங்கும்)

6. பணம் படைத்த தொந்திகள் பாழ்மதச்
சிப்பந்திகள்
நிணம் உறுஞ்சுதல் இல்லையே
இல்லையே இல்லையே இல்லையே-நிதம்
(ஓங்கும்)

7. வேலையில்லாத் திண்டாட்டம் வெறுப்பில்
வேலை செய்கூட்டம்
ஞாலமீதோட்டுந் திட்டமே
திட்டமே திட்டமே திட்டமே-நிதம்
(ஓங்கும்)

8. இன்பர் ஆருகப்பாயும் ஏழைக்கூக்குரல் ஓயும்
தென்புடன் வாழ்க்கை மேவுமே
மேவுமே மேவுமே மேவுமே-நிதம் (ஓங்கும்)

9. சோம்பர் கவலை பேதம் சுருங்கும்;
உத்தரவாதம்
ஆம்பல் வளப்பம் பொழியும்
பொழியும் பொழியும் பொழியும்-நிதம்
(ஓங்கும்)

10. என்றுமே சீவானந்தம் எழும் நலங்களனந்தம்
பொன்றுந்துயரம் பூவிலே
பூவிலே பூவிலே பூவிலே-நிதம் (ஓங்கும்)

—**ப. ஜீவானந்தம்**

*(8-10-1933 ''குடியரசு'' பத்திரிகையில் வெளியானது)*

# சமதர்மக் கொடி

**1935**-ல் தோன்றிய பாட்டுத்தான் இந்தப் பாட்டும். சமதர்மப் பிரச்சாரத்தில், அதன் வேகத்தின் தூண்டுதலே இந்தப் பாட்டிற்குத் தாய். தமிழகத்தில் சமதர்மப் பிரச்சாரத்தின் தொடக்கக் கட்டத்தில் மேலோங்கி நின்ற ஒன்றிரண்டு கருத்துக்கள் இந்தப் பாட்டில் நன்ருக அமைந்து கிடப்பதைக் காணலாம்.

### பல்லவி

சமதர்மக் கொடி தோணுதே
சாரம் நிறைந்த வாழ்க்கை-
வீரரின் திவ்ய லட்சிய (சமதர்ம)

### அனுபல்லவி

குமையும் எளியோர் துயர்க்
கொடுமையைச் சுட்டெ ரிக்கும்
அமையும் புதுஉலக ஆட்சியைச் சித்திரிக்கும்
(சமதர்ம)

### சரணங்கள்

பிச்சைப் பிழைப்பு மில்லை
பெரும் திண்டி வாழ்க்கை யில்லை
எச்சில் நாயோடு சண்டை
இடும் தரித்திரம் இல்லை

இற வாத-இன்பம்
குறை யாது-நாளும்
தர வோதும்-இங்கு
ஏழை எளியர் வாதம் (சமதர்ம)

வட்டி வரியால் கொள்ளை
வாடகை லாபக் கொள்ளை
ஒட்டி உறிஞ்சும் கொள்ளை
ஊர்ப்பட்ட பகற் கொள்ளை

ஒழித் தோங்க-இன்பம்
செழித் தோங்க-மக்கள்
விழித் தோங்க-நாளும்
வெறுமை அடிமை நீங்க (சமதர்ம)

# பொதுவுடைமை அறிக்கை

**வி**ஞ்ஞான சோஷலிசத்தின் முதல் நூல் ''பொது வுடைமை அறிக்கை'' என்ற நூலாகும். மார்க்சும் ஏங்கல்சும் அதன்ஆசிரியர்கள். இந்த ஒப்பற்ற நூலைக் 'கீதங்களில் கீதம்' என்று சமதர்மிகள் உச்சிமேல் வைத்து மெச்சுகிறார்கள்.

உலகம், பொதுவுடைமை அறிக்கையால் உணர்ச்சி யலைந்து வாழ்க்கைப் பாதையில் முன்னேறியதைப்போல வேறெந்த நூலாலும் பயன்பட்டதில்லை.

இந்த நூலின் இறுதி இரண்டு மூன்று வாக்கியங்கள் தான் இந்தப் பாடல். இந்தப் பாடல் விருத்த உருவத்தில் அமைந்திருக்கிறது.

**(விருத்தம்)**

புலமைசெறி ஆதிக்க வகுப்பா ரெல்லாம்
பொதுவுடைமைப் புரட்சியினால் நடுங்கி வீழ்வார்
அலக்கழியத் தொழிலாள ரைப்பி ணைத்த
அடிமையெனும் சங்கிலிகள் அறுந்து போகும்
பலவிதமாய் நலம்தருமோர் புதிய லோகம்
பாட்டாளி மக்களவர் பாங்காய்ச் சேரும்
உலகத்தில் எத்தேசத் தும்வாழ் கின்ற
உழைப்பாளித் தோழர்களே ஒன்று சேர்வீர்!

# சுத்த சமதர்மம்

சுத்த சமதர்மம் ஓங்க வேண்டும்
தொழிலாளர் துன்பங்கள் நீங்க வேண்டும்
எத்தும் புரோகிதம் சாக வேண்டும்
இன்பவிஞ் ஞானம்உண் டாக வேண்டும் (சுத்த)

பஞ்சை பனுதிகள் பாடு பட்டார்
பணக்காரப் பாவிகள் தின்று விட்டார்
கஞ்சிக்குக் கெஞ்சி அழுது கெட்டார்
கடவுள் அரசர்கை விட்டு விட்டார் (சுத்த)

மன்னன் பலத்தாலே கொள்ளை யிட்டான்
மதக்குரு சூழ்ச்சியால் கொள்ளை யிட்டான்
பின்னும்இத் தெய்வங்கள் கொள்ளை யிட்டால்
பிழையுண்டோ நாஸ்திகப் பட்டம்
தொட்டால்? (சுத்த)

சட்ட திட்டங்கள் சமூகத் திற்கே
தலைவிரித் தாடின அவை எதற்கே
கஷ்ட நஷ்டங்கள் உறுவ தாலே
கண்யமில் லைஇப் பிறப்பி னுலே (சுத்த)

ரத்தம் கொதித்திட வேண்டும் தோழா
நரம்பு முறுக்கேற வேண்டும் தோழா
சித்தம் துணிந்திட வேண்டும் தோழா
ஜீவானந்த வெற்றி காண்பாய் தோழா (சுத்த)

(1935)

# கூடி வருவீர்

(விருத்தம்)

அறிவினைத் தூண்டாது மலைபோல மூளையை
  அமிழ்த்தும்சாத் திரமெரிப்பீர்
ஆஷாட பூதிகள் பொம்மலாட் டங்களுக்(கு)
  அடிமையா காதுவாழ்வீர்
வறியகுள் ளச்சமூ கந்தரும் கட்டுகளை
  மண்ணாய்ப் பொடித்தெறிகுவீர்
வாழவொட் டாதரித் துண்ணும் விஷப்பூச்சி
  வன்புரோ கிதம்ஒழிப்பீர்
மறியலே செய்துமுற் போக்கைத் தடுத்திட்ட
  மதம்எனும் பாம்புகொல்வீர்
மனிதரை விழுங்கிடும் தனிஉடைமை
                    யாம்பேயை
  மண்டையி லடித்துமாய்ப்பீர்
குறியோடு கொள்கையும் புதுஉலகு காண்பதில்
  கொண்டுநல் தொண்டுசெய்வீர்
கோதிலாச் சமதர்மம் ஓங்குதற் கேயொன்று
  கூடிவரு வீர்தோழரே

(1935)

# புதுவாழ்வினை ருசித்தேன்

பொன்போல் கொள்கை பூண்டேனே
புதுவாழ்வினை ருசித்தேனே

இன்பால் உலகில் தானே
இடர் தீர்க்கும் சமதர்மத் தேனே (பொன்)

**தொகையறு**

இளிப்பதும், இரப்பதும், இறப்பதும் தொழிலாளி
என்றிடில் அவமானமே
களிப்பதும், சுகிப்பதும் முதலாளி வாழ்வெனக்
கண்டிடில் பெருஊனமே

**பாட்டு**

பாட்டாளி துயர்போ தாதா
பரிதாபம் கரைபுர ளாதா
தேட்டாளர் சதியொழி யாதா
ஜெகமீது சமத்வம்வ ராதா (பொன்)

**தொகையறு**

உலகமும் பொருள்களும் மக்களின் சுகபோகம்
ஒளிபெறச் செய்யும்உறுதி
கலகமும் மோசமும் கவலையுந் துயரமும்
கட்டோடு காணும்இறுதி (பொன்)

## பாட்டு

வாடாத வாழ்க்கையுண் டாகும்
வறுமைப் பிணியற்றுப் போகும்
கோடாத சமதர்மத் தாகம்
கொடுக்கும் புதுமையின போகம்

(1935)

## சமதர்மக் கிளிக்கண்ணி

சமதர்மக் கொடியின்கீழ்
தையல ரின்பவாழ்வு
அமையும் உறுதியடி—கிளியே
ஆண்பெண் பிரிவேதடி?

சாண்பிள்ளை யானாலும்
ஆண்பிள்ளை யென்னும்ஜம்பம்
வீண்பிள்ளா யெனமுழங்கும்—கிளியே
வீரசம தர்மமடீ

வேலையொன் றேமதிப்பு
வெட்டிவாழ்வு பழிப்பு
*சேலைவேஷ்டி பிரிப்பு—கிளியே
செல்லாது சமதர்மத்தில்

பெண்ணடி மையென்போரை
பித்தராஸ் பத்திரிக்குள்
திண்ணெனத் தள்ளுவதனால்—கிளியே
'ஜே!' சம தர்மத்திற்கு

பிள்ளை வளர்ப்புத்துணை
பிரசவச் சவுகரியம்
உள்ளநற் கொள்கையடி—கிளியே
ஓங்கும்சம தர்மமடீ

---

* சேலை-பெண்; வேஷ்டி-ஆண்.

சரிநிகர் சமமென்னும்
சர்க்கரைக் கட்டிக்கொள்கை
தெரிந்து கடைப்பிடிப்பாய்—கிளியே
ஜெகமொன்ருய் வாழ்வோமடி

(1935)

# பணத்திமிர் வீழ்க

(விருத்தம்)

யானைபோற் கொழுத்த மேனி
 இடர்செய்யும் நச்சு நெஞ்சு
பூனைபோல் திருட்டு எண்ணம்
 பொய்புலை நிறைந்த வாழ்வு
ஏனையோர் குடிகெ டுக்கும்
 எத்தனம் பொழுது போக்கு
பானைபோல் வயிறு கொண்ட
 பணத்திமிர் வீழ்க வீழ்க!

(1935)

# அமுத நெறி

### பல்லவி

நமது லகிலே அமுத நெறிகாண் (நமது)

### அனுபல்லவி

சமத் ருமமே ஜகசுகம் சதா
தந்திடும் அல்லாது சரணில் லேயிதா (நமது)

### சரணம்

நவ:நவ மதாய் ஒளிபர விடும்
நகுபி [illegible]வினை கெடும் கருகிடும்
தவழ்புகழ் லெனின் சரிதை வென்றிடும்
சங்கதி யென்றுமே ஜயம் தொடர்ந்திடும் (நமது)

(1936)

# உத்தமர்க்கே பிழைப்பு உண்டு

யுத்தம் கவலை சோம்பல் நொய்மை அலறிச் சாகும்
சுத்த சமதருமத் தொண்டிலே-தியாகத் தொண்டிலே
வீரத் தொண்டிலே
சுமடர் திருடர் மமதை நசுங்கும் (யுத்தம்)

பெத்தப் பெருமனிசர் பேச்சு முறிந்து போகும்
உத்தமர்க்கே பிழைப்பு உண்டுமே-இன்பம் உண்டுமே
ஞானம் உண்டுமே
உழைக்கும் மனிதர் தழைப்பர் புவியில் (யுத்தம்)

பஞ்சும் நெருப்பும் கூடல் பட்டினி ஞானம் சேரல்
படரும் சமதருமத் தன்மையே-வாழ்வின் தன்மையே
மக்கள் தன்மையே
பரந்த நோக்கில் அறிந்து உணர்க! (யுத்தம்)

மிஞ்சும் தனிஉடைமை வீங்கும் சோப்பின்
பலூன்போல்
வெடித்துமறைந்து போகும் உண்மையே-தேர்ந்த
உண்மையே
என்றும் உண்மையே
தெரிந்து வாழ்வில் கலந்து முயல்க! (யுத்தம்)

## மறக்கிலேன்

(விருத்தம்)

பெற்றத்தாய் தந்தை தோழர்
  பிணங்கியே வெறுத்திட் டாலும்
சுற்றமும் சத்ரு வாகித்
  துயர்பல விளைத்திட் டாலும்
கற்றவர் நகைத்திட் டாலும்
  கவர்மெண்டின் பகையுற் ருலும்
உற்றசீர் சமதர் மத்தால்
  உறுபயன் மறக்கி லேனே.

(1936)

# லெனின் வழியிலே

**1935**-ல் பிறந்த பாட்டு இது. தமிழகத்தில் அன்று நிலவிய ஆரம்பகால சமதர்ம இயக்கத்தில் லெனின் வழிக்கு இருந்த மதிப்புக்கு இந்தப் பாட்டு ஒரு எடுத்துக்காட்டு. நுட்ப திட்பமாக இல்லாவிட்டாலும், மொத்தமாக மார்க்சீயம்-லெனினீயம்தான். காந்தீயத்தைவிடச் சரியான அரசியல் தலைமையாக இருக்க முடியும் என்ற அன்றைய புரட்சிகர-இளைஞர் உலகத் துடிப்பை எதிரொலிக்கும் பாட்டு இது.

## பல்லவி

லெனின் வழியிலே—நிதம் ஒழுகுவீர் (லெனின்)

## அனுபல்லவி

தனிஉடைமையால் சனிவிளைந்ததால்
சார்பொதுஉடைமை தழுவுதலேமேல் (லெனின்)

## சரணம்

உழைப்பவர் துயர் ஒழிய முயல்வீர்
உழவ ரின்நிலை உயர்ச்சி பயில்வீர்
இளைப்ப வர்க்கின்றே எழுச்சி புகல்வீர்
இறக்க நேரினும் புரட்சி நவில்வீர் (லெனின்)

## பேடிகள்

(விருத்தம்)

லெனின்பேரை உச்சரித்தோர் தோழரென்றோர்
நெறிகடந்து பசப்புவரேல் பேடியாவார்
தனிஉடைமை வீழ்கவென்றோர் பல்லைக்காட்டித்
தனவந்தர் உறவுகொண்டால் துரோகியாவார்
புனிதமுறும் சமதருமம் வேண்டுமென்றோர்
புறம்காட்டி மதம்பேசில் புலையராவார்
இனிமையுற முழக்குவதும் காசு கண்டால்
இளிப்பதும் சரிஎன்பார் எருமைமாடே!

## புரட்சி வீரர்

கண்மணிநான் ஜெயில்விட்டு முன்னம்வந்த நாள்
முதலாய்
கர்மவீரர் அந்தமான்போய் காவலில் மடிகின்றாராம்
துன்பத்தில் தவிக்கின்றாராம் ஜென்மத்தைக் கழிக்
கின்றாராம்.

எந்தன்நல் தோழர்கள்தூக்கு ஏறிய கதையின்
போக்கு
ஏந்திழையே எந்தன்நெஞ்சை இரும்பாக்கி
ஊக்குதடி!
சிந்தையற்ற நீசர்கூட்டம் இந்தியத் துரைத்தனமே.

பஞ்சையர் பசியால்வாடி பரதவிப் போர்கள்கோடி
பாரினில் பெரும்புரட்சி நேராது விடியாதடி
வஞ்சகத் தலைவர்வேண்டாம் எங்கள்லெனின்
போதமடி.

தூக்குமேடை நின்றசிங்கம் தோன்றியநம் நாடு
பங்கம்
சூழும்படி யாய்நரிகள் ஊளையிடக் கண்டோமடி
ஏக்கமறவே புரட்சி நோக்கும்வீரர் இன்றுமுண்டு
எங்களை மிரட்டுவோர்கள் இப்புவியில் உண்டோ
பெண்ணே?

(1934)

# இந்தியாக் கண்ணிகள்

(இராமலிங்கரின் வெண்ணிலாக்கண்ணி மெட்டு)

வெளுத்ததெல்லாம் பாலுமல்ல இந்தியாவே—வெளி
வேஷமெல்லாம் உண்மையல்ல இந்தியாவே
பழுத்தசூதர் தலைவரைப்போல் இந்தியாவே—இங்கு
பழகக்கண்டோம் விழித்துக்கொள்வாய் இந்தியாவே
உதட்டிலேதேன் உள்ளில்நஞ்சு இந்தியாவே
—கொண்ட

உத்தமர்கள் மெத்தஉண்டு இந்தியாவே
சிலந்திவலை ஈயைக்கொல்லும் இந்தியாவே—தனிச்
செல்வர்கட்சி பொதுமைகொல்லும் இந்தியாவே
மலம்விரும்பும் ஜந்துபோல்வார் இந்தியாவே—பண
மகிமைபேசிக் கொள்கைவிற்பார் இந்தியாவே
பணத்தின்ஜாலம் பசப்புவார்த்தை இந்தியாவே
—கொள்கை

பறித்திடநீ பார்த்திடாதே இந்தியாவே
அனைத்தும்தியாகம் செய்தும்இந்நாள் இந்தியாவே
—வெற்றி

அடையலெனின் கொடியின்கீழ்நில் இந்தியாவே.

(1935)

## சோவியத் வாழ்வு

புது உலகத்தை நோக்குவீர் பூரிப்படைவீர் (புது)

இதுவரை ஈடேரு ஏழைத் தொழிலாளிகள்
எழுச்சி பெறுவதற்கே-இசைந்த இன்பப் (புது)

### தொகையரு

பொல்லா எதேச்சாதி காரன் கொடுங்கோலன்
போகத்திலே புரண்டோன்
பூதலம் நடுக்குறப் புழுதியிற் குடிகளை
புதைத்தகல் நெஞ்சுகொண்டோன்
கல்லாத நிர்மூடன் ஜார்எனும் பெயர்கொண்ட
கசடனை மாய்த்துநின்றேன்
கட்டோ டவன்வமிசம் வீண்சுமட ரின்குழாம்
கருவறுத் தோங்கிவென்றேன்.

### பாட்டு

லெனின்வழித் தியாகிகள் நேர்மை நிறைந்ததோழர்
அநியாய மென்டீத றியார்-ஆட்சிகொள் ரஷ்யப்
(புது)

### தொகையரு

பாட்டாளி மட்டுமே பலன்பெறத் தக்கவன்
பசப்புவோர்க் கொன்றுமில்லை
பாதிரிக் கூட்டமும் தனவந்தர் கோஷ்டியும்
பார்க்கினித் தேவை யில்லை
கூட்டாளி யாவதில் குறுக்கிடும் மதம், கடவுள்
கொல்விஷம் நன்மையில்லை
கூசாது நாத்திக சுத்தசம தர்மமே
கொண்டிடில் தொல்லையில்லை.

### பாட்டு

என்றே செழுமைதரும் ஏற்றநல் ஆட்சிபெறும்
பொன்றுப்புகழின் மிக்கவர்-போற்றும் சோவியத்
(புது)

### தொகையரு

ஊணில்லை உடையில்லை ஓய்வில்லை வீடில்லை
உற்றநற் கல்வியில்லை
உரிமையும் கடமையும் ஒத்ததா யில்லைஎனும்
ஒப்பாரி அங்குஇல்லை
வீணில்லை வேலையற் றோரில்லை தனிஉடைமை
வெம்பூத ஆட்சியில்லை
வீழ்வில்லை ரஷ்யாவில் மேலில்லை கீழில்லை
வெற்றிஎல் லோர்க்கும் எல்லை.

### பாட்டு

பூரண இன்பமும் புகழும்முன் னேற்றமும்
பொருந்தும் விடுதலைக்கே-பொதுஉடைமை (புது)

(1933)

## சோவியத் படிப்பினை

**1937**-ல் பிறந்தது இந்தப் பாட்டு. சோவியத் வாழ்வைப் பற்றிய சிந்தனை ஓட்டத்தின் எதிரொலி இந்தப் பாட்டில் சிறந்த போதனையாக நயம்பட வெளிப்படுகிறது. தமிழ்ப் பெருமக்களிடையில் அந்த நாளில் மிகுந்த வரவேற்போடு பரவிய பாடல் இது.

தோழர்கள் வாழ்க்கையில் ஆனந்தம் வேறில்லை
சோவியத் ஆட்சியின் மாட்சிய லாதில்லை
(தோழர்)
துன்பமும் வறுமையின் கொல்லையும் வேண்டார்
சோறுடை வீடுடன் பாரினில் கேட்பார்
நிமிஷமும் வீணே திரியலா காது
வீரர்களே இனி வீறுடன் சேர்வீர்
வெற்றி நல்வெற்றி தினம் பெறுவீர்—இனி
சோவியத் ஆட்சியின் மாட்சிய லாதில்லை
(தோழர்)
சங்கம் நலம்பெற துங்கம தாக
செங்கொடி ஓங்கி ஜெயம்பெற வாழ்க
இங்கினி யாரே பங்கம் செய்வார்?
எங்கணுமே தொழிற் சங்கமே காண்வீர்
இன்றே நிமிர்ந்தே நீர் ஒன்று குவீர்-இனி
சோவியத் ஆட்சியின் மாட்சிய லாதில்லை
(தோழர்)

# சோவியத் வாழ்வு

•

அந்தக் காலத்தில் உள்ளமும் உணர்வும் கொண்ட மக்களை சோவியத் ஆட்சி சமதர்மத்தை நோக்கியும், சமதர்ம உணர்வு சோவியத் ஆட்சியை நோக்கியும் இழுத்துக்கொண்டிருந்தன. இருபுறத்தின் இழுப்புக்கும் இரையானதின் பலன்தான் இந்தப் பாட்டு.

1932 இறுதியில் உருவான பாட்டு இது.

பாரதி தமிழர் சார்பில் ரஷ்யப் புரட்சியை யுகப் புரட்சியாக வரவேற்றார். அதன் பின்னர், இந்தப் பாடல்தான் முதன் முதலில் சோவியத் உலகத்தைச் சுட்டிக்காட்டியது—பாடல் ரீதியில் என்று நினைக்கிறோம்.

(கட்டபொம்மன் மெட்டு)

1. சோவியத் ஆட்சி நலமறிவோம்
துன்பம் தவிர்த்துச் சுகம்பெறுவோம்
பூவினிலே சமதர்மநாடு
பொதுஉடைமை கொண்ட ரஷ்ய நாடு

ஆவிதுடிக்க உழைப் போரில்லை-அங்கு
அல்வா விழுங்கும் சோம்பேறி இல்லை
பாவியர் என்போர்அந் நாட்டி லில்லை
பாங்கான இன்பம் உலவக் கண்டோம் (சோவி)

2. தேசீய மாம்சிறு வீடு கட்டார்
செகமொன்ருய்ச் சேர்த்திடும் கொள்கை
தொட்டார்
பாசி படர்ந்த பழமை கொன்ருர்
பாரில் நவயுகப் பாதை சென்ருர்
தூசியும் லாபமில் செல்வர் கூட்டம்
துஷ்டக் கிருமிகள் தேய்த்துப் போட்டார்
காசினி கண்ட புதுமையிலே
காட்சி பெரும்காட்சி ரஷ்யாவிலே (சோவி)

3. வேத ஜபதபம் வீழ்ந்து போச்சு
மின்சாரத் தால்வாழ்வு மேன்மை யாச்சு
ஆதர வில்லை மதங்க ளுக்கே
அடிமாண்ட நாஸ்திகப் பேய்க்கி றுக்கே
ஓதரு மாறு கல்வி வளர்ச்சி
உலகத்தை வென்றதோர் நற்கி ளர்ச்சி
போதனை செய்யும் முன்னேற்ற மடா
பொங்கும் ரஷ்யாவில் துலங்கு நடா (சோவி)

4. ஏழை என்னும்பெயர் இல்லை யென்ருல்
ஏற்ற முரைத்திட வேறு முண்டோ
சூழும் மெஷின்களால் விஞ்ஞா னத்தால்
தொல்லை வறுமையைச் சுட்டெ ரித்தார்

கோழைக் கடவுள் விழி பிதுங்க
கோவில்கள் மூடிப் பள்ளி திறந்தார்
வாழும் தொழிலாளர் கூட்ட மொன்றே
வையத்தி லெங்கணும் ரஷ்யா நன்றே (சோவி)

5. வாடாத மக்களும் வாழ்வ தெங்கு?
மாதர் சுயேச்சை மணப்ப தெங்கு?
நாடக முற்போக்கு காண்ப தெங்கு?
நல்லிளைஞர் வேகம் பூண்ப தெங்கு?
கோடாலி மண்வெட்டி ஆள்வ தெங்கு?
குக்கிரா மங்கள் தழைப்ப தெங்கு?
தேடும் மனித சமாஜ மெங்கு?
சீர்மிகும் ரஷ்யப் பொன்னாட்டி லன்றோ!
(சோவி)

# பாடுபடுவோர் தேசம்

வடக்கே ருஷ்ய நாடொன்றிருக்குதாம்- அதைக்
கண்டபேர்க்கு
வாழும்புதிய சக்தி பிறக்குதாம், தோழனே (வட)

அடக்கின் மனித சக்தி துள்ளுமே- அந்த தேசத்தார்
நம்
ஆளும் திறமை நெஞ்சை யள்ளுமே (வட)

பாடுபடுவோர் தேசம் சிறக்குதாம்- அதைப் பார்த்த
பேர்க்கு
பாரிற் புதிய ஞானம் பிறக்குதாம்
தேடும்பொருள்கள் யாவும் பொதுவிலே-அந்த
தேசத்தார்க்கு
சீரும் போகமும் தழுவும் வாழ்விலே (வட)

தனிஉடைமை யாலேதொல்லையாம்- அதைத்
தகர்த்த பேர்க்கு
தாழ்வும் துயரும் வீழ்வும் இல்லையாம்
இனிவரும் புதுஉலகை நோக்கினர்-அந்த தேசத்
தார்கள்
என்றும் மனித இன்பம் தேக்கினர் (வட)

புதுமை புதுமை இன்ப லோகமே-அதன் புனித வாழ்வு

பொருந்தும் முறையில் செய்வாய் தியாகமே

எதுவுமடையக் கூடும் தோழனே-ரஷ்ய தேசத்தார் போல்

எழுச்சி யால்சம தர்ம வீரனே (வட)

*(1935)*

# அக்டோபர் புரட்சி

இந்தப் பாட்டு 1936-ல் பிறந்தது. தமிழகம் எங்கும் பாடப்பட்ட பாட்டு இது. சரியான தீர்க்கதரிசனம் கொண்ட பாட்டு இது.

சடசடவென்றே முறிந்து ஜார்விழுந்த காரணம்
தரணியெங்கும் பொதுவுடைமை தழைப்பதற்
குதாரணம்
படபடத்துத் துடிதுடித்துப் பாமரர் முன்னேகுறார்
பணம்சுமந்த ராட்சதர்கள் பதறிநொந்து சாகிறார்
(சடசட)

வசியமிக்க மார்க்சின்கொள்கை மாநிலத்தில்
பலிக்குதே
மகிழும் ரஷ்யா லெனின் படைத்த வாழ்விஞல்
ஜ்வலிக்குதே
பசியெழுப்பும் புரட்சிவெந்தீ பார்முழுதும் எரியுதே
படையைஏவி விடும்ஏகாதி பத்யவாழ்வு சரியுதே
(சடசட)

அக்ரமங்கள் சுக்குநூருய் ஆக்கும் திண்ணம்
கொண்டனம்
அடிமைப்பேயும் அச்சப்பேயும் அலறிமாயக்
கண்டனம்
உக்ரமாய்ச்செஞ் சேனைவெள்ள மிக்கபோர்க்
களத்திலே
ஓட்டையாச்சு பூர்ஷுவாக்கள் கோட்டைகொத்த
ளத்திலே
செங்கொடிசெஞ் சேனைவாழ்க வாழ்களன்ற
கோஷமே
ஜெகமதிரக் கேட்பதாலே தோழரேசந் தோஷமே
அங்குமிங்கும் உலகயுத்தம் கண்சிமிட்டும் இன்று
தான்
அவனியில்பாட் டாளிமக்காள் ஐக்யமாவீர்
நன்றுதான்!

# பாட்டாளித் தோழா

**1935**-ம் ஆண்டு ஊட்டியில் இப்பாட்டு இயற்றப் பட்டது.

வர்க்க உணர்ச்சி கொண்ட தொழிலாளி-பாட்டாளி வர்க்கத்தின் நவயுகப் பிரளய எழுச்சியை—எழுச்சியின் இடி முழக்கத்தை, தத்ரூபமாகச் சித்தரித்துக் காட்டும் நொண்டிச் சிந்து இந்தப் பாட்டு.

தமிழகத்தில் ஸ்தாபனரீதியான தொழிலாளர் இயக்கம் வெடித்து வீறுகொண்டு எழத்தொடங்கிய காலத்தில் உருவான பாடல் இந்தப் பாடல்.

## நொண்டிச் சிந்து

பாடுபடும் பாட்டாளித் தோழா—இந்தப்
பாருலகின் சொந்தக்காரன் வேறில்லை நீதான்
(பாடு)

மாடுகளோ மேய்ந்த தழையை—மென்று
மனதாரத் தின்னுதடா மாநிலத்திலே
ஆடுகள் கடித்த தழையை—இங்கு
அசைபோட்டுத் தின்னுவதை அறியார் உண்டோ?

கேடுகெட்ட பன்றியும்கூட—தேடிக்
கிடைத்ததைச் சொந்தமென்று அடைத்துவைக்கும்;
பாடுபடும் உனக்கு மட்டும்—பாட்டின்
பலன் இல்லை என்று சொல்வோர் பாதகரடா (பாடு)

நெற்றிநீர் நிலத்தில் விழவும்—நிதம்
நெஞ்சுநோக வும்உடம்பு நெக்கு விடவும்
பற்றிய பசிப்பிணி யோடு—இங்கு
பஞ்சுபடாப் பாடுபட்டு வஞ்சம் இன்றியே
சிற்றெறும்பைப் போலு ழைத்தாலும்—நீ
தேடியதில் பாத்தியதை செப்பக் கூடாதாம்
மற்றவர்க்கே யாவும் சொந்தமாம்—எனும்
வம்பர் சொல்லை மிதித்திட மனம்தேறடா (பாடு)

கஞ்சியின்றிச் சாவது யாரார்?—பிச்சைக்
காரராகி இரந்துண்டு மாள்வது யாரார்?
கெஞ்சியே தவிப்பது யாரார்?—சற்றும்
கேள்விமுறை யின்றிமோசம் போவது யாரார்?
பஞ்சணையில் தூங்குவது யார்?—தினம்
பாலமுதக் கொழுப்புற்று வாழுவது யார்?
மிஞ்சுகின்ற வித்தி யாசத்தால்—வீணர்
மேன்மையுறத் தொழிலாளர் வீழ்கிறாரடா (பாடு)

சும்மா இருப்பவர் தமக்கும்—பல
சூழ்ச்சிகளால் உழைப்போரைச் சுரண்டு வோர்க்கும்
எம்மாதிரி இழிவாயினும்—பலே
எத்தராகிப் பிறர்பொருள் நத்து வோருக்கும்

சிம்மாதனம் குருபீடங்கள்—இந்தச்
செகத்தினைச் சொந்தமாக்கும் சேட்டை பாரடா
அம்மாடாவோ! ஈத நீதிகாண்—இதை
அழித்திடு, நீதிசெய்யும் ஆண்மை கொள்ளடா
(பாடு)

மாடமாளி கைகள் உனது—நெல்
வயல்களும் காடுகளும் யாவும் உனது;
தேடரிய தொழிற் சாலைகள்—இந்த
செகத்தின் பெரும்பொருள்கள் யாவும் உனது;
ஆடையலங் காரம் உனது—இங்கு
ஆட்சியதி காரம்செல்வம் யாவும் உனது;
பாடுபட்டால் கூலியுண் டென்பார்—இந்தப்
பழமொழி உண்மையுறப் பழகிடடா (பாடு)

சென்றகாலச் சட்ட திட்டங்கள்—இங்குச்
செத்ததென்று கொட்டு! ஜெய பேரிகை கொட்டு!
நன்றிகெட்ட மானிடப் பேய்கள்—இங்கு
நடுங்கி மடியச்செய்யும் கடும்புயல் பார்!
ஒன்றுபட்ட செஞ்சேனை வெள்ளம்—கடல்
ஓயினும் பேரொலியாய் ஒலிக்குது கேள்;
இன்றுபுதி தாகப் பிறந்தோம்—என்று
எழுந்து புதுஉலகில் ஏறுபோல் நட! (பாடு)

# புது வாழ்வு

•

**தொ**ழிலாளர் இயக்கம் மும்முரமாக வளர்ந்து வந்த காலம். தொழிற்சங்கங்களைக் கட்டிக்காக்கும் பணியே பெரும் பணியாக விளங்கிய காலம் அது. தேசியக் காங்கிரஸ், மாகாண ஆட்சிகளைக் கைப்பற்றியதன் மூலம் ஜனநாயக சோஷலிஸ சக்திகளுக்கு அன்றாடப் பிரச்சினைகளுக்கும் சங்க உரிமைகளுக்கும் திரண்ட சக்தியோடு போராடி வெற்றிகாண முடியும் என்ற நல் நம்பிக்கையை ஊட்டி வளர்த்த காலம் அது.

அகில பாரதத்திலும் வேலை நிறுத்தங்கள் வெடித்துக் கொண்டும், வெற்றிகரமான சமரச முடிவுகள் நிகழ்ந்து கொண்டும் வந்த காலம் அது. புதுப்புதுத் தொழிற்சங்கங்கள் தோன்றித் துலங்கின காலம் அது.

எழுச்சியை எதிரொலிக்கவும் எழுச்சியை மேன்மேலும் ஊக்குவிக்கவும் ஊர்வலங்களுக்கும் கூட்டங்களுக்கும் தொழிலாளர்களுக்குப் பாடல்கள் பெரிதும் தேவைப்பட்டன. அத்தகு தேவையை நிறைவேற்றும் திசையில் எழுந்த பாட்டு இது, 1934-ல் பிறந்தது.

**பல்லவி**

பெறவேணும் புதுவாழ்வு
தொழிலாளரே-நீங்கள் (பெற)

## சரணங்கள்

கறையான்கள் புற்றெடுக்கும் கருநாகம்
குடியிருக்கும்
காதை காட்டும் பேதை வாழ்வைத்
தீதென் றோட்டச் சேர்ந்து நீங்கள் (பெற)

ஒற்றுமை ஊக்கத்தாலே உன்னத நோக்கத்தாலே
உடைந்து சிதைந்து தகர்ந்த வாழ்வை
முடைந்து வலிமை அடைந்து நீங்கள் (பெற)

சங்கங்களில் அபிமானம் தக்க விஷயஞானம்
சார்ந்து பேதம் தேய்ந்து இன்பம்
சூழ்ந்து வாழத் தேர்ந்து நீங்கள் (பெற)

அற்புதம் கலகலக்கும் ஆனந்தம் தழைதழைக்கும்
அருமையான புதிய லோகம்
பெருமையாக உதிக்க நீங்கள் (பெற)

# நாஞேர் தொழிலாளி

தொழிலாளியே தனது அதல பாதாள நிலைமையைக் கல்நெஞ்சும் கரைந்துருகியோடப் பாடும் பாட்டு. ஊன் உருக, உளம் உருக, உயிர் உருகப் பாடும் பாட்டு. தன்னைச் சமுதாயத் துயர்க்குழியில் புதைத்து வதைக்கும் பெரும் நோய் தீர எது ஏற்ற மருந்து, எது மருந்தல்ல என்பதைத் தொழிலாளி தெரிந்து புரிந்து பாடுகிற பாட்டு இது.

இந்தப் பாட்டை இசைவளம், குரல்வளம், உணர்ச்சி வளத்தோடு பாடியபொழுதெல்லாம் கருவிழிகளைக் கண்ணீர் குளத்தில் மிதக்க விடாதவர்கள் அருமையிலும் அருமை யெனலாம்.

நண்பர் டி.கே. ஷண்முகம் பதிபக்தி நாடகத்தில் தேயிலைத் தோட்டத்திலும், கோவை இராமதாஸ் தொழி லாளர் பொதுக் கூட்டங்களிலும் பாடிய வேளைகளில் எத்தனை ஆயிரம் பேர் மயிர்க் கூச்செறிந்து பெருமூச்சு விட்டுக் கண்ணீர் வடித்திருக்கிறார்கள் தெரியுமா? இந்தப் பாட்டு 1938-ல் பிறந்தது.

(பெரியோர் இருக்குமிடம்—என்ற மெட்டு)

நாஞேர் தொழிலாளி—ஒரு
நாய்க்குறும் சுகமேனும் வாய்க்கும் வழியில்லை
(நாஞேர்)

## சரணங்கள்

ஏனோ புவிவாழ்வு—ஈ
எறும்பும் சுதந்திரம் விரும்பி யடையநான்
தானோ அடிமை ஐந்து—கொடும்
சஞ்சலத் தேள்கொட்டி துஞ்சுகின்றேன்
அந்தோ (நானோர்)

வறுமை கடிக்குதையோ—பசி
வாட்டி வதைக்குதே வருத்திச் சிதைக்குதே
பொறுமை உபதேசம்—பசி
பொறுத்திடச் செய்யாது பெருத்த மதிமோசம்
(நானோர்)

கொள்ளைக் கிரையானேன்—பழங்
கொள்கையை நம்பிநான் குடிகவிழ்ந்து
போனேன்
பிள்ளை மதியுடனே—மதப்
பித்தம் தலைக்கேறி மெத்த உடைந்திட்டேன்
(நானோர்)

உழைத்து உடல் தேய்ந்தேன்—பலன்
உண்ட முதலாளிகள் நிந்தனையே மிச்சம்
தழைக்கும் வகையறியேன்—எங்கள்
சர்க்கார் புரட்சியால் எக்காலம் வரும்?
(நானோர்)

# கோடிக்கால் பூதம்

**நா**ளைக்கு மே தினம். 'புரட்சி' என்ற வார இதழுக்கு ஒரு பாட்டுக் கொடுத்தாக வேண்டும். இரவு 12 மணிக்கு எப்படியும் எழுதிக்கொடுத்த பின்புதான் தலைசாய்ப்பது என்ற தீர்மானம்; சிந்தனை ஒரு அடி எடுக்க அலைந்து திரிகிறது.

அந்நிலையில் மேஜைமீது கிடந்த ஒரு ஆங்கிலநூல் கண்ணில் பட்டது. அது ஒரு சிறந்த ஜெர்மன் ஆசிரியரான ரெணிபுலாப் மில்லர் எழுதிய போல்ஷ்விசம் அகமும் முகமும் (Mind and Face of Bolshevism) என்ற நூல். நூலைப் பிரித்தேன். ஒரு பக்கத்தில் ஒரு பாடல், ரஷ்ய மூலத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு, என் உள்ளத்தைக் கவர்ந்தது. அது தொழிலாளர் பற்றிய பாட்டு. எனக்குப் பருத்தி புடவையாய்க் காய்த்தது போல் ஆயிற்று.

அந்தப் பாடலைத் தழுவி எழுதிய தமிழ்ப் பாடல்தான் இந்தப் பாடல். போரணியில் பேரணியாகத் திரண்டு நின்ற தமிழகத் தொழிலாளர்களைப் பலமுறை கண்களில் நெருப்புப் பொறி பறக்க எழுச்சி வசப்படச் செய்த பாடல் இப்பாடல். இது பிறந்தது 1934-ல்,

கோடிக்கால் பூதமடா—தொழிலாளி
கோபத்தின் ரூபமடா
நாடி எழுந்ததுபார்—குவலயம்
நாற்றிசையும் அதிர

தேடிய தேசம் ஒன்றே—நடைநெஞ்சு
தீப்பொறிப் பார்வை ஒன்றே
சாடிக்குதித்து முன்னே—முன்னேறித்
தாவியே செல்வதைப்பார் (கோடி)

வெந்து புகைந்துருகும்—தொழிற்சாலை
சந்துகள் இருட்குகை
பொந்துகளில் இருந்தே—தொழிலாளி
பூதம் புறப்பட்டதும்
நைந்து நொறுங்கினவே—சங்கிலிகள்
நாலாயிரம் வருடம்
வந்த பழங்கட்டுகள்—பொடிபட்டு
மண்ணில் புதைபட்டதே (கோடி)

செங்கொடி தான்பரப்பி—புதுமன்னன்
தெருக்களில் புகுந்தான்
தன்கரத்தின் வலிமை—காட்டுதற்குச்
சடுதியில் முனைந்தான்
எங்கும் முறிந்தனவே—முதலாளி
ஈனர் எலும்புகளே
பொங்கும் இடிமுழக்கி—தொழிலாளிப்
பூதம் உரைத்ததிவை : (கோடி)

''யாவும் எனதுடைமை—புவிமிசை
யாவும் எனக்குரிமை
ஜீவப்பொருள் உணவு—பானம், உடை
தெருக்கள் மாளிகைகள்

கோவில்கள் கோபுரங்கள்—பாங்கு, பொருள்
கூட்டுக் களஞ்சியங்கள்
காவியம் ஓவியங்கள்—பூந்தோட்டம்
கவிகள் நாணயங்கள் (யாவும்)

புத்தக சாலையுடன்—கல்லூரி
புதுநாடக மேடை
நத்துவண்டி வாகனம்—ம்யூசியம்
நாவாயுடன் பலவும்
இத்தரை மீதினிலே—இனிமேல்
யாவும் எனதுடைமை''
சத்தம் வெடித்ததுகேள்—தோழனே
சமதர்ம உலகில் (கோடி)

# வர்க்க போதம்

1938-ல் இந்தப் பாட்டு உடலெடுத்து, அந்தக்காலம் அகில இந்தியாவிலும் சோஷலிசக் கருத்தோட்டத்திற்கு, சோஷலிஸ்ட் வழி ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்திற்கு நல்ல செல்வாக்கு ஏற்பட்டிருந்த காலம். காந்தியடிகளின் ஆணையையும் மீறி அவருடைய அபேட்சகரான பட்டாபி சீதாராமையாவைத் தோற்கடித்து இந்திய இடதுசாரிகளின் தனிப்பெரும் தலைவராக விளங்கிய சுபாஷ் சந்திர போசைக் காங்கிரஸ் பேரவையின் தலைவராக மகத்தான வாக்குகளால் தேர்ந்தெடுத்த காலம். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் அதன் எந்த நடைமுறைக் கொள்கையையும் நிர்ணயிக்கத்தக்க விதத்தில் 77 இடதுசாரிகள் காங்கிரஸ் சோஷலிஸ்ட் தலைமையில் அங்கம் வகித்த காலம்.

அன்று வர்க்கப் போராட்டங்களில் மட்டுமல்ல; ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டமாகிய தேசியப் போராட்டத்திலும் தொழிலாளி வர்க்கமும், விவசாயப் பெருமக்களும் முன்னணியில் நின்றனர். இவர்களுடைய வர்க்க உணர்ச்சியைக் கூர்தீட்டி விட வேண்டியது அவசியத்திலும் அவசியமாக இருந்தது அன்று.

இந்தத் தேவையைப் பூர்த்தி செய்யும் நன்முயற்சியில் எழுந்த பாட்டு இந்தப் பாட்டு:

செக்கு மாடு போலுழைத்தாய்
தேவைக்கொன்றும் கிட்டவில்லை
செக்குலக்கை போல் கொழுத்தார்
செல்வர் டம்பாச்சாரியானார் தோழா—உந்தன்
சிறுமைதீர வழியறிந்து வாழாய் (செக்கு)

பாடுபட்டு மேனிநொந்தாய்
பலனெதுவும் வாய்த்ததுண்டோ ?
மாடிவீட்டில் பஞ்சணையில்
மலரில்வீணர் புரளுகின்றார் தோழா—இதை
மாற்றும் வழியைக் கேட்டறிந்து வாழாய் ! (செக்கு)

கல்லுடைத்தாய் மண்சுமந்தாய்
காசுனக்குக் குதிரைக்கொம்பு
பல்லக்குகள் கார்சவாரி
பவுசுகளோ சோம்பேறிக்குத் தோழா—இந்தப்
பழியகலத் துணிந்துநின்று வாழாய் ! (செக்கு)

ராப்பகலாய் உழைத்திளைத்தாய்
நாய்ப்பிழைப்பாச் சுன்பிழைப்பு
ஆர்ப்பரிப்பால் உல்லாசத்தால்
ஆனந்தம் செல்வர்பிழைப்புத் தோழா—இந்த
அக்கிரமத்தை சுக்கலாக்கி வாழாய் (செக்கு)

உண்ணும்உண வற்றதாலே
உலர்ந்தவத்தல் உன்குடும்பம்
வெண்ணெயில் செதுக்கிவைத்த
பொம்மை போல் ஜமீன் குடும்பம் தோழா—வீணர்
வெலவெலக்க வீறுகொண்டு வாழாய் (செக்கு)

உன்குடி அழுதரற்றும்
உறுதுயரால் சீர்குலையும்
வன்கொடியர் பணக்கொழுப்பர்
மறந்துமே திரும்பிப்பாரார் தோழா—செல்வர்
மனத்தடிப்பை உடைத்தெறிந்து வாழாய் (செக்கு)

எல்லோரும் இன்பமாக
இருக்களண்ணித் தொண்டுசெய்தோர்
வல்லார் தனவந்தரை
வாழவைத்த கதைதெரியும் தோழா—இனி
மயங்கிடாது பயன்தெரிந்து வாழாய் (செக்கு)

உனக்காக உழைப்பதாக
உரைத்தவரில் பலர்முடிவில்
பணக்காரர் தாசராகிப்
பசப்பினதை உலகறியும் தோழா—நீ
பகுத்தறிந்து துணைதெரிந்து வாழாய் (செக்கு)

அக்குகளும் பாத்தியமும்
அரசியலும் தனம்படைத்தோர்
பைக்குள் அடக்கம் தெரிந்தாய்
பாடுபட்டும் கேடுகெட்டாய் தோழா—கெட்ட
பணத்திமிரைத் தகர்த்தெறிந்து வாழாய் (செக்கு)

உழைப்பவர் முகம்மலர
உன்குடும்பம் வாழ்வுபெற
தழைக்கும் பொதுவுடைமை
தான்மருந்து வாழ்கவென்றே தோழா—இந்த
தாரணியெங்கும் முரசறைந்து வாழாய் (செக்கு)

# ஒற்றுமையே-வெற்றி

முதலாளி வர்க்கத்தை எதிர்த்து நடத்தும் போராட்டத்தில் தொழிலாளி வர்க்கத்திற்கு வர்க்க ஒற்றுமைதான் மகத்தான ஆயுதமாகும். ஒற்றுமையில்தான் தொழிலாளி வர்க்க வெற்றியின் மர்மம் பொதிந்து கிடக்கிறது.

தொழிலாளிவர்க்கம்—நவயுகத்தில்—இழக்க வேண்டியது ஒன்று இருந்தால் அது அதைப் பிணைத்துள்ள அடிமைச் சங்கிலி தான் என்றும், ஆனால் அது பெற வேண்டியதோ ஒரு புதிய உலகம் என்றும், இந்தப் புதிய உலகத்தை அடையத் தொழிலாளி வர்க்கம் உலகம் முழுவதிலும் ஒன்றுபட வேண்டுமென்றும் சென்ற நூற்றாண்டின் முற்பகல் இறுதியில் உலகத் தொழிலாளி வர்க்கத்தின் குருநாதரான காரல் மார்க்ஸ் நிகரற்ற தீர்க்க தரிசனத்தோடு முழங்கினார்.

1937-ல் கோவைப் பஞ்சாலைத் தொழிலாளிகள்—பல ஆலைகளில் பணி புரிந்தவர்கள்—உலகத் தொழிலாளர்களே ஒன்றுபடுங்கள் என்று முழங்கிப் போராடினர். கொஞ்ச நஞ்சம் தெரிந்தும், ஒன்றும் தெரியாத நிலையிலும் போராடினார்கள். லட்சுமி மில் தொழிலாளர் வெற்றிக்கு—பல மில்களைச் சார்ந்த பதினாயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்களின் ஒற்றுமை ஆர்ப்பாட்டம் பெருந்துணையாக இருந்ததென்பதைத் தொழிலாளர்கள் கண்டனர். இந்த நேர் அனுபவத்திலிருந்து எழுந்த பாட்டு இந்தப் பாட்டு:

## பல்லவி

ஒற்றுமையால் ஒத்துழைத்தால்
வெற்றிபெறலாமே—நாம் (ஒற்று)

## அனுபல்லவி

நற்றுணைதன் நம்பிக்கை யோ
டித்தினம் வர்க்க உணர்ச்சி
பெற்றுழைக்கும் மக்கள் எல்லாம்
பேதமின்றித் தினந்தோறும் (ஒற்று)

## சரணம்

பச்சைமரத் தாணிபோல பதித்து சுகம்நாடி
பார்முழுதும் செங்கொடியைப் பறத்தியே
கொண்டாடி
பிச்சையிலும் கேவலமாம் கொச்சை வாழ்வைச்சாடி
பேரரசு தொழில்நாயகம் பேணும் வழிதேடி
கச்சையை வரிந்துகட்டி
அச்சமின்றி உழைத்திடவே
கனமே—அது
தினமே—பொதுத்
தினமே—விட
மனமே—கொண்டு (ஒற்று)

# தொழிலாளி தன்னிலை கூறல்

•

வர்க்க உணர்ச்சி பெற்றுவரும் தொழிலாளி எப்படிப் பிரதிபலிக்கிறான் என்பதை இப்பாட்டுக் காட்டுகிறது. தனது சகோதரத் தொழிலாளியிடம் தொழிலாளி மக்களின் இரங்கத் தக்க நிலைமையை நெஞ்சுருகச் சொல்லும் நிலைமையில் அமைந்துள்ளது இந்தப் பாட்டு.

இந்தப் பாட்டு 1934 இறுதியில் பிறந்தது.

### பல்லவி

பூச்சி புழுக்களுமே சீச்சீயென்று மிழ்ந்திட
ஆச்சு நம்வாழ்வு தோழனே (பூச்சி)

### அனுபல்லவி

ஏச்ச மனிதரெல்லாம் இறுமாந்து கொழுக்கிறார்
காச்ச மனிதர்நச்சுக் கனியெனப் பழுக்கிறார் (பூச்சி)

### சரணங்கள்

சஞ்சலப் பேய்நம்மை தவறாமல் வதைக்குது
தரித்திரப் பேய்வாழ்வை அரித்துச் சிதைக்குது
கொஞ்ச மல்லபசி தினசரி வதைக்குது
கொடுமையை நினைந்திடக் குலையெல்லாம்
பதைக்குது (பூச்சி)

பாடுபடும் உத்தமன் அடிமைப் பிராணி
பழுத்த சோம்பல்திருடன் அரும்திரு மேனி
கேடுசெய் கயவனே பிரபல ஞானி
கிட்டும் பவிசுகளைச் சற்றுக் கண்காணி (பூச்சி)

# விழிப்படைந்த தொழிலாளி

**தொ**ழிலாளர் கோரிக்கை—கிளர்ச்சிகளும் வேலைநிறுத்தப் போராட்டங்களும் செந்தூள் பறத்திக்கொண்டிருந்த காலம். தன்னுடைய உரிமைகளிலும், கோரிக்கைகளிலும் தொழிலாளிப் பெருமக்களுக்கு மேன்மேலும் விழிப்புப் பெருகிவந்த காலம். சட்டத்தில் பெற்ற உரிமைகளை, பெற வேண்டிய உரிமைகளைப் பற்றிய அறிவு சராசரித் தொழிலாளிக்கு வாழ்க்கை மூச்சாக மாறி வந்த காலம்.

இந்தக் காலத்தில் தொழிற்சங்க தலைவர்களுக்குத் தொழிலாளர் கோரிக்கை—உரிமைகளைத் திரட்டிக் கொடுக்க வேண்டியதும், பரப்பித்தீர வேண்டியதும் பெரும் பொறுப்பாக விளைந்தது.

மேற்படிப் பொறுப்பை நிறைவேற்றும் திசைவழியில் முளைத்த பாட்டு இது, 1938-ல் பிறந்தது.

பாடுபட்ட தாலே பலன்பெறுவோம்—நாங்கள்
பாரிலுள்ள இன்ப முழுதும் பெறுவோம்
நாடறிய எங்கள் உரிமை நாடுவோம்—நாங்கள்
நாலிரண்டு மணிநேர வேலை தேடுவோம். (பாடு)

நம்பியே மோசம் போனோம்
நஷ்ட முற்றுப் போனோம்
சம்பள உயர்வு காணும்
சண்டைக்குத் தயாரானோம்

ஜால மனைத்தும் கொய்வோம்-பொது
வேலை நிறுத்தப் செய்வோம் (பாடு)

வேடன்கை மாறுய் விழிப்ப தொழிப்போம்-நாங்கள்
வேலையில்லாத்திண் டாட்டத்தைத் தடுப்போம்
கூடும்வரைப் பாதுகாப்புத் திட்டம் வகுப்போம்-
எங்கள்
கோரிக்கை வியர்த்த மாகாவா றுஉழைப்போம்

கூட்டுறவி னுலேயது
கூலமுற்று வாழ்வோம்
நாட்டுதொழிற் சங்கத்தால்
நன்மைபல சூழ்வோம்
நாசமுறை எதிர்ப்போம்-சர்வ
தேசக்குறை தவிர்ப்போம் (பாடு)

சிக்குலீவோடு விபத்துக் கீடுபெறுவோம்-நாங்கள்
சேமமுறுமாறு இன்சூரன்சும் உறுவோம்
தக்கபடி பெண்களுக்கும் வேலைதேடுவோம்-மெத்தச்
சாதகம் குழந்தைகளுக்கும் நாடுவோம்

சட்டங்களில் பாட்டாளி
சலுகைபெறச் செய்வோம்
திட்டிவதைக் கும்செல்வர்
திமிரடக்கி உய்வோம்
செய்யும்தொழில் பேணுவோம்-இன்பம்
பெய்யும்வழி காணுவோம் (பாடு)

மக்களில் உழைப்பவர்க்கே யாவையும் என்போம்-
நாங்கள்
மற்றவரையும் உழைக்கச் செய்குவ மென்போம்
பக்கவாதச் சொத்துரிமை தன்னை ஒழிப்போம்—
உலகில்
பாட்டாளி ஆட்சிதன்னைக் கொண்டுசெழிப்போம்

பாதக ஏகாதிபத்தியம்
பாழடையக் காண்போம்
சாதகப் பொதுவுடைமை
தனைமனதில் பூண்போம்
சங்கடம் நீங்கிடுவோம்-இன்றே
செங்கொடி தாங்கிடுவோம் (பாடு)

# பாட்டாளியும் நடைமுறை மதமும்

## கண்ணிகள்

கெட்ட கேடுகளும் பட்ட பாடுகளும்
கேட்டிடில் பல்விதமே—இங்கும்
பட்டவர்த்தனமாய்ச் சொல்லில் பாட்டாளிக்கும்
பாதகம்தான் மதமே.

புல்லுருவிப்போல அரிப்புழுப் போன்ற
புரோகிதர்க்கே நிதமே—நலம்
சொல்லி ஏழைகட்குத் தண்ட வரியிடும்
சூதர் பொறி மதமே.

வஞ்சகக் குள்ளநரி யெனும் பண்டிதன்
வாய்வயிற்றுக் கிதமே—தந்து
துஞ்சும் பழம்கொள்கை ஒப்பென் றெளியாரைத்
தொல்லை செய்யும் மதமே.

வேர்வை சிந்தும் தொழிலாள ருலகத்தை
வீழ்த்திமிதித் ததமே—செய்யும்
சேவையை வாழ்வெனக் கொண்டிடும் செல்வர்க்கு
'ஜே' என்றிடும் மதமே.

மக்களை வருத்தி வாழ்வில் கொழுத்திடும்
மன்னர் தெய்வாம்சம் என்றே—கூறி
எக்காலும் துக்கத்துள் வைக்கும் மதத்தாலே
ஏழையர்க் கேது நன்றே.

காவாத தெய்வத்தைக் காட்டி அழுதுமே
காசைக் கரியாக்கிடும்—படி
ஓயாதுபதேசம் செய்யும் மதத்தாலே
ஊனம் உண்டாகிவிடும்.

இன்றுவரை மதத்தால் கஷ்டம் தீர்ந்ததோ
எண்ணிக்கடைத் தேறுங்கள்—இனி
நன்றுற வேண்டின் உழைப்பாளரே மதம்
நாசமுறக் கூறுங்கள் (கெட்ட)

# என்ன கொடுமை!

என்ன கொடுமை—நாம்
எண்ணினும் கண்ணீர் பெருகும்
ஏழையர் துயரக்கடல் (என்ன)

அன்னமோ வயிறார அருந்தின தில்லை
அடிஉதை தொழிலாளர் படுகிறார் தொல்லை
ஆயிரம் ஆண்டுகள் தேய்கிறார் மாய்கிறார்
ஆண்ட நிலைபூண்ட முதலாளிகள் அசையவில்லை
(என்ன)

ஐந்து வயதுடைய மைந்தனும் உழைப்பான்
அஷ்டமாதக் கர்ப்பிணி அழுதழு துழைப்பாள்
தந்தையும் ராப்பகல் நொந்துதான் உழைப்பான்
சஞ்சலம் தரித்திரங்கள் மிஞ்சிஉழைப் போரைத்
தின்னும் (என்ன)

## போலித் தலைவர்கள்

வேஷதாரி—வலை
வீச்சை உதறியெறி (வேஷ)

நேசமுடன் சமதரும நெறியாளர் போல்நடிப்பார் !
நித்தமும் தொழிலாளர் தலைவர்பாடமும் படிப்பார்!
தாசராகிப் பணக்காரர் தங்களைக் காக்காய்ப் பிடிப்பார் !
சமயோசிதம் போலத்தான் சுயகார்யம் முடிப்பார்!

தாமதமே—இன்றித்
தலைவர்களைத் தெரிவாய்! (வேஷ)

கமிட்டி கமிஷன்களில் கனம்பெறவே சென்றவர் !
காரியத்துக் குதவாத சூரரென நின்றவர் !
பொம்மலாட்டமே புரிந்து புகழ்விரும்பி வென்றவர் !
போகமுறும் போது தொழிலாளிகள்யார் என்றவர்!

பூரணமாய்—வேஷ
தாரிகளை வெறுப்பாய் !

# தொழிலாளர் அவலநிலை மாற

ஏழைத் தொழிலாளர் வாழ்வு இன்பம் சூழ்கவே
இன்பம் சூழ்கவே—புவித்
துன்பம் வீழ்கவே

வாழையடி வாழையாக வந்தவீனர் கூட்டம், போக
வாழ்வடையப் பாடுபட்டு வாடுகின்றனர்
வாடுகின்றவர்—திண்
டாடுகின்றவர் (ஏழை)

**தொகையறு**

புளிக்கின்ற கூழுக்கும் எரிகின்ற வெய்யில்தன்னில்
புழுவாய்த்துடித் துழைக்கிறார்
பொந்துண்டு பாம்புக்கு வளையுண்டு நண்டுக்குப்
புகலின்றியே தவிக்கிறார்
அளிக்கின்ற காசுக்கும் உதைக்கின்ற உதையையும்
அழுதழுதுமே தின்கிறார்
அடிமையால் கவலையால் மடையராய்க் கடையராய்
ஆறுத்துய ருண்கிறார்,
களிக்கின்ற பணக்காரர் கொழுக்கின்றதைக் கண்டும்
கர்மத்தை நொந்தழுகின்றார்
கருத்துண்டு கையுண்டு உருப்படுவ மெண்ணாது
காலமெல்லாம் தொழுகிறார்

இளிக்கின்ற பல்லோடு பழிக்கின்ற செல்வரிடம்
இரந்திரந்தே மெலிகிறார்
எச்சிலிலை மீதிலே குக்கலொடு சண்டையிடும்
இழிவடைந்தே நலிகிறார்

## பாட்டு

பாட்டாளி மக்கள்துயர் பார்க்கச் சற்றும்
சலிக்கவில்லை
கூட்டாளி யாகிலவர் கோரும் சேமமே
கோரும் சேமமே—தரும்
கோடி லாபமே (ஏழை)

# தேச சுதந்திரம்

**1937**-ல்கோவை பாப்பநாயக்கன்பாளையம் "லட்சுமி" மில்லில் தமிழக வரலாற்றில் பொன் எழுத்தில் பொறிக்கத்தக்க ஒரு வேலை நிறுத்தம் நடந்தது. செங்கொடியின் கீழ் திரண்டுள்ள இன்றைய தமிழகத் தொழிலாளி வர்க்கத்திற்கு அதுதான் வெற்றிகரமான மிகப்பெரிய ஆரம்பப் போராட்டம். பின்னால் பல வேலைநிறுத்தங்களுக்கு உணர்ச்சி ஊற்றாகவும், வழிகாட்டியாகவும் ஒளிவிட்ட வேலைநிறுத்தம் அது.

லட்சுமி மில்லில் தொழிலாளர்கள் ஆலைநிர்வாகிகளிடமிருந்து நூற்றுக்கு நூறு விகிதம் கோரிக்கைகளையும் அந்த வேலைநிறுத்தத்தின் மூலம் பெற்றனர். அந்தக் காலத்தில் தலைகீழ் நின்றாலும் பெறுவது துர்லபமான சங்க அங்கீகாரம், என்ற அடிப்படை ஆதாரக் கோரிக்கையையும், போராட்டக் கோரிக்கையாக வைக்காவிட்டாலும் சமரசப் பேச்சின்போது வற்புறுத்திப்பெற முடிந்தது. தொழிலாளர்களிடம் அது வரை காணாத எழுச்சியின் வேகத்தைக் கண்டு நிர்வாகம் அதிர்ச்சியடைந்து வணங்க வேண்டியதாயிற்று.

23 நாட்கள் நாளொரு மேனியாக வளர்ந்து நடைபெற்ற அந்த வேலைநிறுத்தப் போராட்டத்தை அன்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினரும், காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியின் தமிழகக் கிளையின் செயலாளருமாகிய தோழர் ஜீவா சென்னையிலிருந்து கோவை சென்று நேரில் தலைமை தாங்கி நடத்தினார்.

பாப்பநாயக்கன்பாளையம் செங்கோட்டையாகத் திகழ்ந்ததோடு அவ்வூர் மக்கள் வெள்ளமாகத் திரண்டு வேலை நிறுத்தத்தை முழுமூச்சோடு எல்லாவகையாலும் ஆதரித்தனர். பெண்களும் சிறுவர்களும் சிறுமிகளும் அந்தப் போராட்டத்தில் பங்கு கொண்ட விந்தையைச் சரித்திரப் புதுமை என்றே சொல்லலாம்.

உணர்ச்சி வெள்ளத்தில் நீந்திய பால்மணம் மாருச் சிறுமிகள் வேலைநிறுத்தக் கூட்டங்களில் பாட, பாட்டுக்கள் எழுதித் தரும்படி ஜீவாவுக்குப் பணித்த அன்பின் ஆணைக்கு இணங்கி எழுந்த பாடல்கள் இவை.

தோழர் கே. பி. ஜானகி, தோழர் இராமதாஸ் முதலியவர்கள் பாட்டுத் திறத்தால் தமிழகம் எங்கும் செல்வாக்குப் பரப்பிய பாடல்கள் இவை.

அதுமட்டுமல்ல, 'தேசம் சுதந்திரம் பெறலாகாதா?' 'புரட்சி செய்வோம் துன்பம் போகும்' முதலிய பாடல்கள் காங்கிரஸ் மேடைகளிலும் சகல பகுதியினராலும் விரும்பி வரவேற்கத்தக்க பெருமையை அடைந்திருந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது.

''தோழர்கள் வாழ்க்கையில் ஆனந்தம் வேறில்லை'' என்ற பாடலை ஜானகியோ, இராமதாசோ உணர்ச்சிப்பெருக்கில் குரலெடுத்துப் பாடினல் சமதர்ம உணர்வினர் பிணைப்புண்டு நிற்பர்; தொழிலாளர்கள் உணர்ச்சியில் துள்ளுவர்.

தேசம் சுதந்திரம் பெறலாகாதா—எங்கள் இந்தியா
(தேசம்)

ஜெகமதில் எங்கணும் இழிவே பெருகவும்
சேமம் ஒழிந்திட நின்றோம் (தேசம்)

ஏகாதிபத்தியம் வந்து புகுந்து
ஏறிமிதித்திட நொந்தோம்
சோகம்தவிர்க்க நாமினிஒன்று
சூழ்ந்து துணிய லாகாதா (தேசம்)

காங்கிரஸ் கொடியின் கீழ்நின்றே ஆங்
காரமுடன் போர் செய்வோம்
ஓங்குக புரட்சி ஏகாதிபத்யம்
ஒழிக, நம்கொடி வாழ்க! (தேசம்)

# புரட்சி செய்வோம்

புரட்சி செய்வோம் துன்பம் போகும்
புத்தி உணர்ந்திட வந்தநற் போதனை
புரிந்துடன் எழுவோ மே (புரட்சி)

புதுமையை மறந்த புன்மைகள் அகல
பொதுவுடைமை பழகு வோமே (புரட்சி)

வழிதுறை யறியா மனிதராய் நாமே
இழிவிது வரை அடைந் தோமே (புரட்சி)

அடிமையைச் சாட அணிபெறுங் காலம்
துடியெனத் துள்ளி வந்திடு வோமே (புரட்சி)

கடமையோ டுலகினைக் காத்திட இதுநாள்
கங்கணம் கட்டிடு வோமே! (புரட்சி)

# கூட்டணி

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பு முறுக்கேறியிருந்த காலம். இடதுசாரிக் கட்சிகளெல்லாம் காங்கிரசையே ஏகாதிபத்திய எதிர்ப்பின் பொதுஸ்தாபனமாகக் கொண்டு அதன் கொடிக்கீழ் ஒன்ருய் நின்று பணிபுரிந்த காலம். அடிப் படை மக்களான, பெருவாரியான விவசாயி—தொழிலாளி மக்களை ஏகாதிபத்திய எதிர்ப்புக் கூடாரத்தினுள் கொண்டு வராத வரையில் தேசியப் போராட்டம் வெற்றிபெறுவது முயற்கொம்புதான் என்ற உணர்ச்சி மேலோங்கி நின்ற காலம்.

அந்தக் காலத்தில் பிறந்தது இந்தப் பாட்டு. இது பிறந்தது 1936-ல்.

## பல்லவி

ஆங்கிலேயராட்சி முறை அழித்திடவே வாரீர்
ஆண்மையுள்ள எந்தன் தோழரே—இங்கு (ஆங்கி)

## அனுபல்லவி

ஓங்கிடும் கொடியர் ஓடிட வாடிட
ஈங்குடன் சாம் ராஜ்ய வீழ்ச்சி
காண்குவம் என்றே உடன் (ஆங்கி)

**சரணம்**

விவசாயிகள், தொழிலாளிகள், வாலிபர்
விரவி முக்கூட்டென விளங்கும் செம்படையினர்
நவயுகப் போர்முறை நாடி எதிர்த்திடில்
நாலு வேளையாமுன் கொடுங்
கோலர் சாய்வர் ஆகையால் (ஆங்கி)

# பூரண சுயேச்சை

**1937**-ல் முளைத்தது இது. தேசீய முன்னணி மூலமே பூரண சுயேச்சை அடைவது நடக்கிற காரியம் என்ற எண்ணம் பொதுப்படையாகப் பொது மக்களிடம் பரவி யிருந்த காலம் இந்தக் காலம்.

பூரண சுயேச்சைநம் தேசம்எய் திடுமாறு
போர்முர சடிக்க வேண்டும்
புன்நெறிகொள் ஏகாதி பத்தியமோ டுறவுசெய்
போக்கைப் பழிக்கவேண்டும்
சாரமில் லாதபுது அரசிய லெனும் அடிமைச்
சாசனம் உடைக்க வேண்டும்
ஜனநாய கத்திற்கு முரணான சட்டங்கள்
தம்மைத் தகர்க்க வேண்டும்
ஈரமில் லாதோர் ஆட்சிமுறை யால்சிறை
இருக்கின்ற தோழ ரெல்லாம்
எத்தகை நிபந்தனையு மின்றிவிடு தலைபெறற்
கேற்றதொண் டாற்ற வேண்டும்
ஊரறிய நாடறிய உலகறிய நம்கொள்கை
உறுதிபெற வாழ வேண்டும்
ஓர்மையாய் தேசீய முன்னணி படைப்பதில்
ஒன்று படுவீர் தோழரே.

# அடிமை வாழ்வு ஏன் பிறந்தது?

**கொ**த்தடிமை வாழ்வில் கொடுமை நிகரற்றது. அந்நியர் ஆதிக்கம் நம்மீது மலேபோல் குந்திச் சவாரி செய்வதை நம்மிடையே வரவேற்கும் சக்திகள் எவை? அடிமைத்தனம் தலைவிரிகோலமாய் ஆட நம்மிடை உருவாகி நின்ற தகாத பழக்கவழக்கங்கள் உணர்ச்சி ஓட்டங்கள் எவை? அடிமை வாழ்வின் தோற்றுவாய் எது? என்றெல்லாம் விடுதலை வீரர்கள் மூளையைக் கரைத்த காலம் அது. 1935—ல் உதித்த பாடல் இது.

(விருத்தம்)

நல்லாரை உழைப்போரைப் பறையர் என்றார்
நயவஞ்ச முடையோர்மேற் சாதியென்றார்
பொல்லாத கொடியவரை மன்னர் என்றார்
பொய்உரைத்த கயவர்தம்மைக் குருக்கள் என்றார்
சொல்லாரும் தாயினத்தை அடிமை என்றார்
சூதுமிகும் ஆசாரம் சமயம் என்றார்
இல்லாத பொய்வழியில் சென்றதாலே
இந்நாட்டார் அடிமை வாழ் வெய்தினரே!

## "நிமிர்ந்து சண்டை போடு!"

ஏகாதிபத்தியப் போராட்டம் 'ஜம்' என்று முறுக்கேறி வந்தகாலம். காங்கிரஸ் கொடியின் கீழ் இடதுசாரிகளின் செல்வாக்கு சொற்சக்தி குதித்பாட்டு முன்னேறிய காலம். தேச பக்த வீர இளைஞர்களின் வழிபடு கடவுளாக விளங்கிய சுபாஷ் பாபு தலைமையில் இடதுசாரி ஒற்றுமைக் குழு—கம்யூனிஸ்டுகள், காங்கிரஸ் சோஷலிஸ்டுகள், ராயிஸ்டுகள், பார்வர்டு பிளாக்கர்கள், கிசான் சபைக்காரர்கள், தொழிற் சங்கவாதிகள் ஓரணி வகுத்து நின்றசீரணி, தெம்பும் திராணியும் பெற்ற வலதுசாரிகளை, பிற்போக்காளர்களை, ஏகாதிபத்தியப் பித்தர்களைக் குடல் கலங்கச் செய்து கொண்டிருந்த காலம்.

தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியை 77க்கு மேற்பட்ட இடதுசாரி அங்கத்தினர்கள் அணிபெறச் செய்த காலம். அன்று ஏகாதிபத்திய எதிர்ப்புப் போர் முழக்கம் கேளாத பேச்சு உப்புச்சப்பில்லாத சோறு.

எத்தனை எத்தனை அரசியல் மேடைகளிலோ பாடுகிறவர்கள்—கேட்கிறவர்கள் கண்களில் தீப்பொறி பறக்க விந்தைபல புரிந்த பாட்டு இப்பாட்டு.

இது பிறந்தது 1939 தொடக்கத்தில்.

நிமிர்ந்து சண்டை போடு தோழா (நிமிர்)

தமக்கா யுலகைத் தாழ்த்திடு தோஷம்
சார்ந்த பிரிட்டிஷ் சர்க்கார் நாசம்

புரட்சி ஓங்கும் புரட்சி கோஷம்
பொங்க முழங்கி ஜோராய் வீறுடு
சிங்கமெனச் சமர் செய்க தோழா !

அஷ்ட தரித்திரம் அகன்றிட வேண்டி
அடிமைக் கொடுமதனை அறுந்திட வேண்டி
துஷ்ட துரைத்தனம் தொலைந்திட வேண்டி
காங்கிரஸ் கொடிக்கீழ்
பாங்கொடு நீயும்

கச்சையை வரிந்து கட்டிநின்றே தோழா (நிமிர்)

# வழி மறைத்திருக்குதே

ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டம் சமஷ்டி-எதிர்ப்புப் போராட்டமாக உருவெடுத்து உறுத்துகின்ற காலம். காங்கிரஸ் பேரவையினுள், அன்று இரண்டு போக்குகள் திட்டவட்டமாகக் காட்சியளித்தன. ஜவகர்லால் நேருவின் ஊக்கமும் ஆக்கமும் மிக்க தலைமையில் இடதுசாரிக் கட்சிகளும் ஜனநாயக மெய்யன்பர்களும் சமஷ்டி எதிர்ப்புக் கொள்கையைக் கடைப்பிடித்து, நாட்டின் மூலை முடுக்குகளில் கூடச் சண்டமாருதப் பிரச்சாரம் செய்துவந்தனர். காங்கிர சின் பழம்பெரும்தலைமை சமஷ்டியை ஏற்கும் திசையை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தது. இந்தப் போக்கை உரம் செய்யத்தக்க விதத்தில் காந்தியடிகள் ஒரு 'புதிய வெளிச்சம்' காட்டினர். இந்த வழவழாத் தன்மைகொண்ட 'புதிய ஒளி' இயல்பாகவே ஜனநாயக முற்போக்கு சக்தி களின் எதிர்ப்பைக் கிளப்பிற்று.

இந்த எதிர்ப்பின் நிழலாடுகிற பாட்டு இது. 1939-ல் எழுந்து பாட்டு இது. காங்கிரஸ்-சோஷலிஸ்ட் கட்சிகளின் அரசியல் மேடைகளில் மிகுந்த வரவேற்புடன் பாடப்பட்ட பாட்டு இது.

**பல்லவி**

வழிமறைத் திருக்குதே மாபெரும் தலைவர்சொல்
மலைபோல் தடையாய் நிற்குதே.

(வழி)

## அனுபல்லவி

அழிவுசெய் அந்நியர் ஆட்சி அழிப்பதற்கு
அரும்தருணம் வாய்த்தது வெறும்தருணம் ஆகுமோ
(வழி)

## சரணம்

போராட மாட்டாமல் போனாலும் போகட்டும்
'புதிய வெளிச்சம்' கண்டே
ஓரடி விலகினால் போதும்தடை செய்யாமல்
உரிமைப்போர் நடத்துவோம்
சுதந்திரப் படுத்துவோம்
(வழி)

# தேசீய வாழ்வு

தேசீய வாழ்வு தீவிரமாக முறுக்கேற்றப்படவேண்டும்; ஏகாதிபத்தியத்தோடு சமரசம் செய்யும் போக்கு அறவே கைவிடப்படவேண்டும். காந்திஜியால் எதையும் செய்ய முடியும்; எனவே அவருடைய தனித்தலைமையே போதும் என்ற கருத்தோட்டம் ஜனநாயக விரோதமானது என்ற இடதுசாரி ஜனநாயக உள்ளத்தின் எதிரொலியே இந்தப் பாட்டு, **1939**-ல் பிறந்தது.

தேசீய வாழ்வு — அதி
தீவிரமா முறை மேவிடு மோ - நம் (தேசீய)

ராஜீய போதமும் ஞானமும் வேகமும்
நாளும் வளர்ந்து - நம்
நாட்டினர் மேநிலை கூட்டு வரோ - நம் (தேசீய)

நம்பும் ஒருவரால் இன்ப சுதந்திரம்
நாட்ட முடியாது
நாமினி ஓர்முகமா யெழவே - நம் (தேசீய)

போலியும் போர்வேண்டாப் — போக்கும் ஒழிகவே
காலமிது போர்க்குக்
காங்கிரஸ் மாசபை ஓங்கிடவே — நம் (தேசீய)

# என்றைக்குச் சுதந்திரம்?

இது சுதந்திரம் பற்றிய ஒரு கோண வீச்சு. விடுதலை வேட்கையின் ஒரு குறிப்பிட்டமாதிரியான எதிரொலி, பேத உணர்வுகள் அடிமைத்தனத்தைத் தாங்கிநிற்கும் தூண்களாக அமைவதை இந்தப் பாட்டு வெளியிடுகிறது. இது பிறந்தது 1939-ல்.

### பல்லவி

என்றைக்குச் சுதந்திரம் வருமோ—ஏழை
இந்தியர் துயரங்கள் அறுமோ (என்றை

### அனுபல்லவி

கன்றைப் பிரிந்து நாளும் கதறும் பசுபோல் வாடி
ஒன்றுக்கும் வழியின்றி உழலும் மனிதர் கோடி
(என்றை)

### சரணம்

சாதிகள் மதங்களால் சதிகார பேதத்தால்
தாழ்வு உயர்வுபேசும் சழக்கர் அநீதத்தால்
நீதிநெறியு மின்றி நிட்டூரத் துக்குள்ளானோம்
நீள்நிலத்தில் யாவர்க்கும் கீழ்நிலைப் பட்டுப்போனோம்
(என்றை)

# ஒன்று பட்டால்...

**1947**-ல் எழுந்தது இந்தப் பாட்டு. நாட்டுப் பிரிவினை யின் சாபத்தீட்டை மனத்தில் இருத்தி, இந்து-முஸ்லீம் ஒற்றுமையை வலியுறுத்தும் பாட்டு இது. காந்தி—ஜின்னு பேச்சு வெற்றிபெற விழையும் பாட்டு இது.

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு — நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு
நன்றிது தேர்ந்திடல் வேண்டும் - இந்த
ஞானம் வந்தால்பின் நமக்கெது வேண்டும்
என்றநம் பாரதி வாக்கு - பேணில்
இன்பமும் வெற்றியும் உண்டு எல்லோர்க்கும் (ஒன்று)

## தொகையரு

காந்தியும் ஜின்னுவும் கூடி - நாடு
கடைத்தேற ஒர்வழி கண்டிடு வாரேல்
சாய்ந்திடும் வெள்ளைய ராட்சி - ஈங்கு
சகலர்க்கும் சுதந்திரம் தழைத்திடு மன்றோ?

## பாட்டு

பஞ்சமும் நோயும் கூத்தாடி - நாட்டை
பாழ்படுத் தும்நிலை நம்மை விட்டோடி
கொஞ்சும் விடுதலை யாலே - மக்கள்
கூடிக் குலாவிக் களிப்பர் மென்மேலே (ஒன்று)

# இது தகுமா

**1945**-ம் ஆண்டு காங்கிரசின் போக்கை நினைந்து எழுந்த ஒரு பொறி இது.

**பல்லவி**

இதுதகுமோ சரிதானோ சொல்வீரே (இது)

**அனுபல்லவி**

புதிய போர்முறை புவியி லெழுந்தது
பூரண விடுதலைப் போரை மழுப்புறார் (இது)

**சரணம்**

'வெள்ளையனே வெளியேறு' என்பார்கள்
விருந்து வைப்பார் விபரீதமே
கள்ளமார்க் கெட்காரரர் காங்கிரஸ் வேஷம்
காணும் துர்ப்பாக்கியம் பேணி வளர்க்கின்றார்
(இது)

# வாரீர் தோழரே !

### பல்லவி

வாரீர் தோழரே ! மாநில மேதையரே !
வாலிபாரான வீரரே ! ஜோராய் நீர் (வாரீர்)

### அனுபல்லவி

பூரண வாழ்விலும் சமபோக மதிலும்
சேரவாரும் செகத்தீரே ஜோராய் (வாரீர்)

### சரணம்

ஜனசத்ருநிதம் அடிமையும் மடமையும்
செகமீதினில் வீழவே ஜோராய் நீர்
கனவிலும் நனவிலும் வீரேடினி
நாடி நாமோதிட 'காம்ரேட்' இன்பமே (வாரீர்)

*(1937)*

## மத அபின்

மத அபினியைத் தவிர்ப்போம்—உயர்
மதிநலம் பல குவிப்போம்—காரல்
மார்க்சும் லெனினும் காட்டும் வழியில்
தீர்க்கமாக நாட்டியே மனம் (மத)

### தொகையறு

தொன்றுதொட் டின்றுவரை பாட்டாளி உழல்கின்ற
துயரக் கடற்கு வித்து
ஒன்றுபட் டோங்குத் தொழிலாளர் ராசைக்கு
உருப்படா மதம் விபத்து.

### பாட்டு

பிரிந்து பிரிந்து நைந்தார் – மத
பேத வலையில் வீழ்ந்தார் – இனிப்
பிணங்கு மடமை தவிர்த்தெல்லோரும்
இணங்கி வாழ முனைந்திந்நாளில்.

### தொகையறு

சோம்பேறி முதலாளி சூழ்ச்சியட் டூழியம்
தொடர்ந்திடச் செய்யும் மதமே
தேம்பியே தொழிலாளி விதியைநொந் தேயழச்
செய்வதும் பாழும் மதமே.

## பாட்டு

புரட்சி யுணர்ச்சி மிகுப்போம்—மத
போதனைகளைத் தவிர்ப்போம்—இனிப்
பூதலந்தனிலே உழைப்பவர்
சாதகம்பெறும் ஆட்சிபடைக்க (மத)

(1936)

## ஏமாற வேண்டாம்

ஏமாந்திட வேண்டாம் இந்தியத் தோழரே
தோழரே தோழரே தோழரே —இன்னும் (ஏமாந்)

சாமி கிருபையென்று தவமிருந்தே யுழன்று
சேமித்த நன்மை பூச்சியம்
பூச்சியம் பூச்சியம் பூச்சியம்—இன்னும் (ஏமாந்)

கோவில் குளங்களாலே கொள்ளைபோச் சானதாலே
ஆவி சோர்ந்திங்கு நைகிறோம்
நைகிறோம் நைகிறோம் நைகிறோம்—இன்னும்
(ஏமாந்)

சடங்குகளால் இத்தேசம் சார்ந்தது சர்வநாசம்
மடங் கொண்ட வாழ்க்கை போதுமே
போதுமே போதுமே போதுமே—இன்னும் (ஏமாந்)

(1935)

# கொள்ளைச் சிரிப்பு

## நொண்டிச் சிந்து

கொள்ளைச் சிரிப்பு வந்ததே—குப்பன்
குழவிக்கல் சாமியென்று கும்பிட்டபோது
பிள்ளைவரம் பெற்றிட வென்று—வள்ளி
பேரரசு வேப்பமரம் சுற்றியபோது
கள்ளை மொந்தையாகக் குடித்து—சுப்பன்
காட்டேறி ஆடுதென்று கத்தியபோது
சள்ளைதரும் பாவம் தொலைக்க—பொன்னி
சாக்கடையே தீர்த்தமென்று மூழ்கியபோது
(கொள்)

கொள்ளைச் சிரிப்பு வந்ததே—ராமன்
கோவிலுக் கழுதுபாப்ப ராகியபோது
எள்ளும் நீரும் வாரியிறைத்து—கண்ணன்
எத்துவாளிப் பார்ப்பானை வந்தித்தபோது
புள்ளினக் கருடனைக் கண்டு—சீதை
பூமியில் விழுந்து 'கிருஷ்ணு' என்றிட்டபோது
கள்ளக்காவி வேடதாரிக்கே—லீலா
கடவுள் பணிவிடைகள் செய்திட்டபோது (கொள்)

மெத்தச் சிரிப்புக் கிடந்தான்—மத
வேஷங்களும் வெறிகளும் வீம்புகளும்தான்
சுத்தமடச் சாதி வழக்கம்—செய்யும்
சூழ்ச்சிகளும் சேஷ்டைகளும் துரோகங்களும்தான்
புத்திகெட்ட ஆத்திகத் தோடு—துட்டப்
புரோகிதமும் தந்தமோச நாசங்களுந்தான்
நித்தம் கேலிக் கூத்துகளாச்சே—இவை
நீங்குகின்ற நாளடிமை நீங்குகின்றநாள் (கொள்)

*(1935)*

# ஒரு சேதி

சாதிமதமொரு போதுமினிஉத
வாதுஅறவிலக் கிடுவாயே
சாமிவிதிமுத லாதிபலமிகு
சாகுமுறைதவி ரெழிலாளே !
சூதுநிறைவழி சூழுமிழிவழி
தீதுதெரிகிற மதியாலே
தோகைநலமுற நீதிபெறவல
தோழர்களையுற முயல்வாயே
பாதிவரையெது மேவுவதுஉத
வாதுயிதுஅநு பவமாகும்
பாரில்சுயமரி யாதையினிதுறு
பாதைபுகழ்தரு மறியாயே
நாதியிலையென ஓதிலுடனொரு
சேதியுரைபணி மொழியாளே
ஞானமதிலுயர் தியாகமுறஜெயம்
நாடிவருமிது தவறாதே (சாதி)

(1935)

# கடவுள் ஏன் இல்லை?

கடவுளில்லை கடவுளில்லை
கடவுளென்ப தில்லையே ! (கடவு)

மடமையுற்ற வாழ்க்கையே மடங்கள் தந்ததாதலால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

கடமையற்ற வீணரே களிக்கிறூர்க ளாதலால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

வெடிமருந்து யுத்தமேகம் வீறுகின்ற தாதலால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

கொடுமையோ டடிமையும் குமுறுகின்ற தாதலால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

நடவுநட்ட தோழர்கட்சி நாமடைந்து நின்றதால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

தினம்உழைப்ப வர்க்கிசைந்த ஜெகம் அவாவி
நின்றதால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

அடிமை மக்கள் இழிவினை யகற்றவேண்டி நின்றதால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

உடைமைமுற்றும் பொதுவிலாக்கி யோங்குமாறு
நின்றதால்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

கடல்நிகர்த்த சேனைதான் கடிந்துசூழ்ந்த போதிலும்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

உடலைக்கண்ட துண்டமாக்கி ஊறுசெய்த போதிலும்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

தொடைநடுங்கும் ஆத்திகத்தின் தொல்லைமிக்க
போதிலும்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே

அடைசல்வித்தை கற்றபேர் அடம்பிடித்த
போதிலும்
கடவுளில்லை கடவுளில்லை கடவுளென்ப தில்லையே
(கடவு)

(1935)

# இடி விழுந்தது

### பல்லவி

இடிவிழுந்தது கடவுள்மேல்-எங்கும் நாத்திகம் (இடி)

### அனுபல்லவி

படீர்படீர் என்று மக்கள் பந்தமுற்றுமே தெறிக்க
அடிமேல் அடிவிழுந்ததே ஆத்திகம் சாக (இடி)

### தொகையறு

பன்றியிலும் நாயிலும் பகுத்தறிவு சேர்மனிதன்
பழிப்புறக் கண்டதாலும்
பலதொல்லை தின்றிடத் தொழிலாளர் சாகையில்
பணக்காரர் கொழுத்ததாலும்
அன்றியும் விதவைகளை அழவைத்து ஆண்மக்கள்
அக்கிரமம் செய்ததாலும்
அஞ்சிக் கிடந்தபேர் மிஞ்சித் தவித்தார்கள்
அன்புச் சிவத்தை உமிழ்ந்தார்

### பாட்டு

அடிமைத்தனத்தின் எல்லை அநியாயக்காரர் தொல்லை
சுத்தமெய் அறிவு தோன்றும்

சுயநலப் புலிகளின் நயவஞ்சக நாடகம்
    சூழ்ச்சிகளும் மறையு மன்றோ?
காரியம் பேணிடும் வீரர் விஞ்ஞானிகள்
    கட்சியால் கட்டுரைகளால்
கற்பனைக் கடவுள்தான் கட்டோ டழிந்தது
    கவலைக் கடல் கடந்தார்.

### பாட்டு

மக்களினம் தழைக்க மாசிலின்பம் கொழிக்க
தக்க சுயேச்சை போகமே சதாசெழிக்க (இடி)

(1935)

# பிதற்ருதே

### பல்லவி

ஞானமில்லாதே பிதற்ருதே – மதி
யீனவாத்திகம் உதவாதே – மாதே (ஞான)

### முடுக்கு

நாமரூப ரஹிதப் பொருளேது
பூமிமீது கடவுள் பொருள்பொய் (ஞான)

நஞ்சுக்கிணை பூலோகத்தினிலிது
கொஞ்சத்துயரோ தோஷித்தனமதனுல் (ஞான)

நட்டநடுப்பகல் பொட்டை யெனப்பட
முட்டுமதிக்குறை யெட்டுணையிப்படி (ஞான)

### சரணம்

தேனே கடவுளேது திருடர் கற்பனைச்சூது
ஜீவானந்தப் புதுஉலகிகழத் திவாசனையேன்
உலகியலறியடி (ஞான)

(1935)

# நம்மைப் பிடித்த சனி

(கட்ட பொம்மன் மெட்டு)

நம்மைப் பிடித்த சனிதெரிவோம்
நாட்டின் மௌடீகம் கொலேபுரிவோம்
பொய்மை மனிதர்சொல் புண்ணியநாடு
பூவினில் நாம்வாழும் இந்தியநாடு.

கைம்மையில் நீறுவோர் கோடியுண்டு
கஞ்சிக்குச் சாவோர்கள் கோடியுண்டு
செம்மை வளர்ச்சி இந்நாட்டிலில்லே
சீர்குலேத்து மக்கள் வாடக்கண்டோம்.

சாதீயச் சாக்கடை நாற்றங்கண்டார்
தலேக்கொரு பாழ்மதம் சார்ந்துகொண்டார்
ஆதி அனுதியைப் பாடிநின்ருர்
அறிவைத் தகைந்து புதுமைகொன்ருர்.

போதும் போதுமென்ற வியாதியுற்ருர்
புழுவிற் கடைப்பட்ட வாழ்வுபெற்ருர்
மேதினி கண்ட கொடுமையிலே
மெத்தஉண் டிந்தியா தேசத்திலே.

கோவில் குளங்கள் மலிந்துபோச்சு
குள்ளப் புரோகிதர் கொள்ளேயாச்சு
ஆவி துடிக்கும் மனிதருக்கே
ஆண்டான் அருட்பேச்சு வீண்மயக்கே.

சேவிக்கும் பக்தரோ கோடிகோடி
செத்து மடிகின்றாரே திண்டாடி
பாவம் கர்மமென்று ஓலமடா
பாரில் நம்நாட்டிலே கேட்குதடா.

நாறும் மலத்தில் மனிதர்கேடாய்
நம்பும் வைதீகர்கள் ஈமக்காடாம்
சாறு பிழிந்த சடங்கினத்தால்
சக்தி, புத்தி, யுக்தி ஒத்திவைத்தார்.

மாறியாடும் பெரு மானூர்கூட்டம்
வஞ்சனைக் கூத்துக்களோ எதேட்டம்
வீறும் சுயேச்சையும் மற்றதென்றே
வீழ்வது இந்தியா நாடிதன்றோ?

சஞ்சலத் தால்வாழ்வு சாய்வதெங்கு?
தற்குறித் தன்மையில் தாழ்வதெங்கு?
துஞ்சும் அடிமை தொடர்வதெங்கு?
சூழ்ச்சிச் சுமடர் சுகிப்பதெங்கு?

கெஞ்சும் உழைப்பாளர் மிஞ்சலெங்கு?
கிள்ளை மொழியார் தவிப்பதெங்கு?
பஞ்சு படாப்பாடு மக்கட்கெங்கு?
பாரினில் இந்திய நாட்டிலன்றோ?

(1935)

## 'மிகவும் கெட்டோம்'

கெட்டாலும் கெட்டோம் மிகவும் கெட்டோம்
கீரியும் பாம்புமாய் வாழ்ந்து கெட்டோம்
முட்டாளில் முட்டாள் அடியுந் தொட்டோம்
மூச்சுப் பேச்சின்றி யடிமைப் பட்டோம்
மோசக்காரர் வீச்சு
முழுதும் வெற்றியாச்சு
நாசக்காரர் பேச்சு
நமையழிக்கப் போச்சு
ஞாலம் சிரிக்குதடி - துயர்
நாட்டை யெரிக்குதடி (கெட்டாலும்)

அஞ்சாமை யில்லை அறிவு மில்லை - வாழ்வு
அஞ்ஞானப் பூண்டு முளைக்கும் தொல்லை
கஞ்சா அபின்போல் மதத்தின் தொல்லை சிந்தும்
கண்ணீர்க் கடற்கேது முண்டோ எல்லை ?
காச்சுப் பூச்சுக் கூட்டம்
கவலையால் திண்டாட்டம்
சீச்சி வம்பர் கோட்டம்
தினசரி ஆர்ப்பாட்டம்

சிந்தனை யற்றுப் போனோம் — கண்ணே!
விந்தை மனித ரானோம்! (கெட்டாலும்)

சாதிச் சடங்காால் இழிவடைந்தோம் — நிதம்
சாமிக் கழுது மனமுடைந்தோம்
வீதிக்கொரு கோவிலைப் பணித்தோம் — வேறு
வேலை யில்லாது பக்தி புரிந்தோம்
மிஞ்சியது மேது
விதியெனும் பொய்ச்சூது
கெஞ்சுவ திப்போது
கிடைத்ததே யல்லாது
கேவலம் மாய்ந்த தோடி? —நல்ல
ஜீவனம் வாய்ந்த தோடி? (கெட்டாலும்)

மண்ணு மரங் கல்லு தெய்வங்களா? —பாழும்
மந்திரம் தந்திரம் செல்வங்களா?
கண்ணுங் கருத்துமில் செல்வங்களா? —மக்கள்
கஞ்சிக் கிரப்பது கண்மங்கலா?
காட்டு வெள்ளம்போலே
கலக உள்ளத்தாலே
ஊட்டு மறிவாலே
ஒருபுரட்சி மேலே
உற்றால் சுகம் பெறுவோம்—வாழக்
கற்றால் பயன் பெறுவோம் (கெட்டாலும்)

(1935)

# பெண் விடுதலை

ஜனநாயக இயக்கத்தில் செம்பாதிக்குமேல் முக்கியத்துவம் பெற்று விளங்குவது பெண் விடுதலை இயக்கம். சமதர்ம இயக்கத்திலிருந்தும், தொழிலாளர் இயக்கத்திலிருந்தும், கணமும் துளியும் பிரிக்கமுடியாத இயக்கம் அது. சென்ற நூற்றாண்டும், இந்த நூற்றாண்டும் இதுவரையும் இந்த உண்மையைப் பல்வேறு உருவங்களில் எதிரொலித்து வந்திருக்கின்றன. பாரதமும் தமிழகமும் இதற்கு வழிவிலக்கானவை அல்ல.

இந்தப் பாட்டு-ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டமும் சரி, தொழிலாளி வர்க்கப் போராட்டமும் சரி, சமதர்மக் கொள்கைப் போராட்டமும் சரி, வலுப்பெற்று விரிந்த பரந்த அளவில் வளர்ச்சியடைவதற்கு-பெண் இன்று நடைமுறையில் அடிமைப்பட்டுக் கிடக்கும் இழிநிலை ஒழியச் செய்ய வேண்டும் என்ற நோக்கோடும் போக்கோடும் எழுந்தபாட்டு இது. உடைந்து தகர்ந்து வரும் பழைய சமுதாயத்தின் பெண்ணைப்பற்றிய மதிப்பீடுகளை, ஏளன உணர்ச்சிகளைக் கிள்ளி எறியக் காரசாரமாகக் குரல் கொடுக்கும் பாட்டு இது. இது உருவாகியது 1936-ல்.

உடனடிமை யொழிய வேண்டும்—பெண்கள்
உரிமை யடைய வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

மடையர் பழைமை மாயவேண்டும்; அதற்குரிய
மார்க்கம் புதுமைபெற வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

நாயென்றும் பேயென்றுமே
நங்கையரைப் பழிப்போர்
வாயடங்கிட வாழவேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

பாவிகள் பெண்களென்னும்
பாதகர் வாய்க்கொழுப்பை
தூவென்றுமிழும் திறன்வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

பெண்ணைக் கன்னபின்ன வாய்ப்
பேசித் திரியும் வம்பர்
கன்னத்தோர் அறைவிழ வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

தட்டுமுட்டுச் சாமான்போல்
தையலரைப் பாவிக்கும்
முட்டாள்தன மகல வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

சின்னத்தனமாய்ப் பெண்ணை
சித்தரிக்கும் நூற்களை
இன்னே நெருப்பிலிட வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

பேணும் சம சந்தர்ப்பம்
பெருகும் சுதந்திரத்தால்
ஆணும் பெண்ணும் இன்புற வேண்டும்—
வேறென்ன வேண்டும் (உடனடி)

# மாதரசி

கூட்டறுந்த விடுதலை உணர்ச்சி, கடும்வேகமான துடிப்புடன் எதிரொலிக்கும் பாட்டு. வைதிகப் பழைமை உணர்வு மிரளத் தக்க விதத்தில் புதுமைக் கலக உணர்வு, கொண்டாடடித்துக் கால மாறுதலை வரவேற்று முழங்குவது இந்தப் பாட்டு.

மாதரசி—மன
மாற்றம்செய் தமிழரசி (மாத)

வேதனையைப் பாசந்தி போல்
விழுங்கும் மனோபாவம் வேண்டும்
வெந்த போதும் நொந்த போதும்
வீறிட் டெழும் ரோஷம் வேண்டும்
பாதகத்தை அம்பு போலப்
பாய்ந் தடிக்கும் தன்மை வேண்டும்
பச்சை நாவி வைதீகத்தைப்
பாழ் படுத்தும் வன்மை வேண்டும்
பார் தனக்கே—புதுப்
பாதை சொல்லி இயக்கே (மாத)

கோழை உலகை வதைக்கும்
  கொடிய விதியைச் சுடுவாய்
கொஞ்சம் சுகபோக ஞானக்
  குளிர் தருவைத் தான்நடுவாய்
ஏழை எளியர் உன்னதம்
  எய்திடப் பாடு படுவாய்
என்றென்றும் மாறும் தன்மைக்(கு)
  ஏற்ற மார்க்கமே தொடுவாய்
இன்ப லோகம்—பெற
  ஏற்பாய் விஞ்ஞான வேகம் (மாத)

கற்பென்று பூச்சி காட்டும்
  கழுதைகளை நிந்தனை செய்
கட்டற்று சிட்டுப் போற்
  களித்திடவே சிந்தனை செய்
அற்பர் நினைப்பிலே மண்
  அடிக்கவே நிபந்தனை செய்
ஆண் பெண் சமதையெனும்
  அமுத வாக்கை வந்தனை செய்
ஆடவரே—செய்த
  ஆதிக்கமே தவறே. (மாத)

# அழைப்பு

**1935** தொடக்கத்தில் தோன்றிய பாட்டு. சமதர்மத்தில் பெண்கள் பங்கை பாப்பா வாயிலாக உணர்த்தும் பாட்டு. பிரச்சாரத்திற்கு மிக எடுப்பான பாட்டு.

பாப்பா ஒரு சொல் கேட்பாய்—நிதம்
பரிவோடிதம் சேர்ப்பாய் !
பாவையர்கள் சமதர்மச்
சேவைசெய்யும் தேவை சொல்வாய் (பாப்பா)

பெண்ணே வாழ்வின் கண்ணே—எனப்
பேசி நலம் உன்னே
பித்தர் செய்த பெண்ணடிமை
இத்தரையிற் பொடி செய்வாய் (பாப்பா)

சாதி மத பேதம்—நம்மைத்
தாழ்த்தும் கேட நீதம்
தையலர்கள் தொழிலாளர்
உய்யும் பணிசெய்யின் லாபம் (பாப்பா)

சொத்து சுகம் பொதுவே—துய்ப்பும்
தொழிலும் சமமிதுவே

தொல்லுலகத் துயர்க் கடல்
தூர்க்கும் சமதர்ம முறை (பாப்பா)

வேண்டும் தோழர் கூட்டம்—திண்ணம்
வெற்றி நம் போராட்டம்
வீராங்கனைக ளெல்லோரும்
போராட வரவழைப்பாய் (பாப்பா)

வாழ்வில் பெரும் புரட்சி—ஜல்தி
வருது புவிப் புரட்சி
வாருங்கள் சேருங்கள் வெற்றி
கூறுங்கள் என முழங்கு (பாப்பா)

# கும்மி

**1933** ஜனவரி 15ந் தேதிய ''குடிஅரசு'' வாரப் பத்திரிகையில் வெளிவந்தது.

1. பச்சைக்குழந்தைக்குப் பாலுமில்லை—அதன்
பட்டினியழுகை கேட்டதில்லை
இச்சையுடன் பாலைச் சாமிக்கென்றே கல்லில்
இட்டு வணங்குகிறார் முத்திக் கென்றே.

2. ஏழை யெளியவர் ஆடையின்றிக் கந்தை
ஏற்றுடுத்தி மனம் ஏங்குகின்றார்
பாழான கல்லுக்குப் பட்டாடைகட்டிடும்
பக்தரெல்லாம் வெறும் பித்தரன்றோ.

3. கூழுக்கழு மக்கள் கோடியுண்டு—நித்தம்
கும்பியெரிபவர் கோடியுண்டு
பாழுக்கழுகின்றார் சாமிக்கென்று கல்முன்
பாற்சோறு பொங்கல் படைத்துமேதான்.

4. எண்ணெயற்றுத்தலை யீஞ்சுசெடி போன்றோர்
எத்தனை கோடி இத்தேசத்திலே

கண்ணை மூடிக்கொண்டு எண்ணெய் குடங்குடம்
கல்மேலே கொட்டும் கருத்தென்னவோ ?

5. குள்ளக் குடிசைக்கும் குட்டிச்சுவருக்கும்
கொஞ்சமல்ல மக்கள் கெஞ்சுகின்றார்
உள்ளபொருள் எல்லாம் கல்லுத்தெய்வம் வாழ
ஊட்டுகின்றார் கோவில் நாட்டுகின்றார்.

6. கஞ்சிக்குக்காணி நிலமில்லை—கையில்
காசில்லை யென்பாருக் கெல்லையில்லை
விஞ்சு கற்சாமி பிழைத்திடவே கோடி
வேலி நிலமுண்டு விந்தையன்றோ ?

7. சாமிக்களித்த வித்தேசத்து நன்மக்கள்
சாகின்றார் பஞ்சத்தும் நோய்களிலும்
சேமித்து நாம் நம்மைக்காத்திடுவோம் என்றும்
சீவானந்தம் பெற வாழ்த்திடுவோம்.

# ஆறுதல் உண்டா ?

ஆரிடத்தில் சொல்லி நெஞ்சம்
ஆறுதல் செய்வோம்
ஆறுதல் செய்வோம்—மனம்
தேறுதல் செய்வோம் (ஆரிடத்)

பாரத நாட்டில் பெண்கள்
பாடுசொல்லின் நொந்த புண்கள்
சாரமற்ற வாழ்வடைந்து
தாழ்வடைந் தோமே
தாழ்வடைந் தோமே—துய
ராலுடைந் தோமே (ஆரிடத்)

கூண்டி லடைப்பட்ட
கூவும் தொல்லை
கொள்ளை கொள்ளை
வேண்டிவந்தவர மிதென்று
வெம்பி வேகுருள்—பாழும்
விதியை நோகிருள் (ஆரிடத்)

அற்பர்தம் கேலிப்பேச்சு
ஐயகோ ! பெருத்துப் போச்சு
கற்பென்று மிரட்டி எம்மைக்
கசக்கிக் கொல்கிறார்
கசக்கிக் கொல்கிறார்—பழங்
கதைகள் சொல்கிறார் (ஆரிடத்)

காலமெல்லாம் துடிதுடிப்பு
கஷ்டத்தில் கண்ணீர் வடிப்பு
ஆலகால ஆண்கள் செய்யும்
ஆதிக்கப் போக்கு
ஆதிக்கப் போக்கு—எம்மை
பாதிக்கும் தாக்கு (ஆரிடத்)

பாவார் பணியினந்தம்
ஆவேசம் தழுவும் சந்தம்
ஜீவானந்தம் மொழியிற்
சிந்தை நாட்டியே
சிந்தை நாட்டியே—பெண்கள்
சேவை யீட்டியே (ஆரிடத்)

# பெண் விடுதலைக் கிளிக்கண்ணி

பெண்ணெனக் கூறிவிட்டால்
பேயுமிரங்கு மென்பார்
கண்ணற்ற ஆடவரால்—கிளியே
கட்டுண்டு பெண்கள் நைந்தார் !

ஆணுக்கோர் வகைச்சட்டம்
அரிவையர்க் கொருசட்டம்
கோணல் உலகத்திலே—கிளியே
கொடுமை கொடுமையடி !

உண்டி சுருங்குவது
பெண்டிர்க் கழகென்றுபின்
கண்டபடி புசித்தார்—கிளியே
கடைகெட்ட ஆடவர்தான் !

பேசிடில் தெய்வக்கற்பு
பிசகுமென்றே மிரட்டி
தோஷிகளாய் ஆடவர்—கிளியே
தோகையரைப் பழித்தார் !

காட்டுக் கரடி, நகை,
கைதி போல் கன்னியரை
வீட்டிலே பூட்டி வைத்தார்—கிளியே
வெஞ்சினம் பொங்குதடி !

உலக முழுதும் சுற்றும்
உரிமை யாடவர்க் குண்டாம்
விலகி யொழிப்பதுவே—கிளியே
மெல்லியலார் முறையாம் !

பெண்களுக் கொன்றுமில்லை
பேச உரிமையில்லை
மண்மிசைப் பெண்பிறப்பு—கிளியே
மண்பிறப் பாச்சுதடி !

ஆவேசமாய் எழுவோம்
அடிமை விலங்கொடிப்போம்
ஜீவானந்தம் மொழிபோல்—கிளியே
சேமம் பல பெறுவோம். (பெண்)

# மாதர் சுதந்திரம்

மங்கையர் சுதந்திர ஜெய கோஷம்—இந்த
மாநிலம் களித்திடும் சந்தோஷம்—உயர்
மாதுர்யத்திலே சுயேச்சை
சாதுர்யத்திலே பெறும்—உத்
தேசம்—சுவி—சேஷம் (மங்)

ஆடவர் ஆதிக்கம் பெற்ற செய்கை—கொடும்
அக்ரமம் விளைத்த நச்சுப் பொய்கை—என
ஆண்மையுடன் கண்டனங்கள்
மேன்மேலும் சரமாரியாய்ப்
பெய்கை—தரும்—உய்கை (மங்)

போர்புரிந்து வெற்றி பெறும் வேகம்—கொண்டால்
பூழ்திபடும் ஆடவர்செய் துரோகம்—பெண்கள்
புத்தம் புதுக் கிளர்ச்சிகள்
நித்தமும் பயின்றிடும் வி
வேகம்—உப—யோகம் (மங்)

பாவையர் அடிமையெனக் கொண்டு—செய்த
பாதகத்தைப் பாழ்படுத்தும் தொண்டு—தனைப்
பாடும் ஜீவானந்தம் சொற்கள்
பாடும் புதுப்பெண்ணின் சொல்கற்
கண்டு—வெற்றி—யுண்டு (மங்)

# பொன் புவி கண்டேன்

### பல்லவி

துன்பமற்ற பொன்புவி கண்டேன்
தோகையர் சுதந்திர சுக
போக நலங்கள் மிகுந்த (துன்)

### சரணங்கள்

இன்ப வல்லியர்க் கிதுவே சுகவாசம்
எந்த மதமும்வேண்டா இயல்பினர் நேசம்
தென்புடன் சேர்வதால் தினமும் சந்தோஷம்
திக்கற்றவர் இல்லையெனும் தக்கதோர் விசேஷம்
(துன்)

பாழும் அடிமைப் பூண்டைப் பறித்திடத்தாமே
பகர்சமதர்ம ராச்சியம் பாடுவோம் நாமே
சூழும் ஜீவானந்தன்சொல் துணிந்து வாழ்வோமே
சுத்தமாய்க் கொடுமைமுற்றும் இத்தினம்
விலகிப்போமே (துன்)

(1936)

# பாசிசம்

அச்சு நாடுகள் என்று அழைக்கப்பட்ட இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் ஆகிய மூன்று நாடுகளும் யுத்தத் திசையில் மேன்மேலும் தலைதூக்கி வந்த காலம். பாசிசம், நாஜிசம், ராணுவ வெறி என்ற மூன்று நாச நஞ்சுகளும் கூட்டணி வகுத்து நின்ற காலம். பாசிச எதிர்ப்பு அணியும் 'ஜம்' மென்று மதர்ந்து நிமிர்ந்து எழுந்த காலம்.

இந்தியாவிலும், தமிழகத்திலும் பாசிச எதிர்ப்பு முக்காரம் போட்டு முழங்கிய காலம். 1938-ல் பிறந்தது இப்பாட்டு.

## பல்லவி

பாசிசமே பாசிசமே
பாதக ஏகாதிபத்தியத் தீதின் அகோரத்தன்மை
(பாசி)

## அநுபல்லவி

நீசத்தனத்தின் எல்லை நிட்டூர ரூபம்
நெறியில் சர்வாதிகார வெறிமகா பாபம் (பாசி)

## சரணங்கள்

முதலாளி வர்க்கத்தின் முடிவுறுங் காலம்
முரட்டாவே சத்தோடாளும் மிரட்டல்மாய் மாலம்
பதறிக்கதறிச் சாகும் பாமரர் கோலம்
பாரிற் படாதுசெய்யும் குரூரத்தின் ஜாலம் (பாசி)

தொழிலாளரை நசுக்கும் பழிகார நோக்கு
சோஷலி சத்தின்பொல் லாதவிரோதப் போக்கு
அழிமுசோலினி ஹிட்லர்அதர்ம ஜப்பானின் போக்கு
அநீதஅடாத யுத்தச் சனியனுக்கேற்ற தோக்கு
(பாசி)

அபிசினிய மக்களை அழித்த கொலைகாரப்பேய்
ஆம் ஸ்பெயினைச்சுடுகா டாக்கிடு ராட்சசப்பேய்
நபும்சகன்போல் சீனவை நாசம்செய்யும் புலைப்பேய்
நடுங்கும் லோகப்போர் வந்தே ஒடுங்கி மாளும்
துஷ்டப்பேய் (பாசி)

# பாசிசப் பேய்களெல்லாம்

இந்தப் பாட்டு 1942-ம் ஆண்டில் காவல் கைதியாக வேலூர் சிறையில் இருந்தபோது எழுதப்பட்டது. அப்பொழுது இரண்டாவது உலகப் பெரும் போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. மனித நாகரிகமே அழிந்துவிட்டது என்று குலைநடுங்கத்தக்க விதத்தில் ரத்தப் பிசாசு நரவேட்டையாடிக்கொண்டிருந்தது.

இந்த மரணக்கூத்தைக் கண்டு, ஆறுத் துயரமும் தீராக் கோபமும் கொண்டு விரைவில் எழுந்த பாட்டு இது.

பாசிசப்பேய்க ளெல்லாம் — உலகினைப்
பாழ்படுத்துவதைப் பார்
ரோஷமுடன் எதிர்த்தே — செஞ்சேனை
நொறுக்கித் தள்வதைக் கேள்
நாசிசமாம் புலைப்பேய் — சண்டாள
ரத்தவெறிகொண்ட பேய்
ஆசை மலைப்பாம்பாய் — யூரோப்பை
'அபக்'கென விழுங்கும்!
ஜப்பானென்ற குள்ளப்பேய் — கீழ்த்திசையில்
துப்போடு வேட்டையாடும்.

அப்போது சீனத்திலே — நாசவேலை
இப்போது எவ்விடத்தும் !
பீரங்கிக் கோட்டையிலே — இப்பேய்கள்
போரங்கி பூண்டிருந்தே
பாரெங்கும் தன்கொடுங்கோல் — பரவிடப்
படை எறிந்துறுமும் !
கொள்ளைக் காரச்சயித்தான் — பயங்கரக்
கொம்பேறி மூர்க்கனோடு
கள்ளக்கரும் பூதம் — ஒன்றான
காட்சியே பாசிசப்பேய்
ஆகாயத்தின் மேலே — சென்றிரைந்து
அலறிடும் ஒரு பேய்
வேகமாய்க் குண்டெறிந்தே — அழிவுகள்
விளைத்திடும் ஒரு பேய்
செங்குருதிக் கடலில் — வீரர்தமை
முங்கவைக்கும் ஒரு பேய்
எங்கும் பொதுமக்களை — பலிகொண்டு
ஏப்பமிடும் ஒரு பேய்
நச்சுப் புகைவீசி — மூச்சடைக்க
நாசம் செய்யும் ஒரு பேய்
பச்சைக் குழந்தைகளை — பெண்டிர்தமைப்
பங்கம் செய்யும் ஒரு பேய்
ஆசியனும் ஒரு பேய் — சுத்தரத்த
ஆரியனும் ஒரு பேய்
தேசிய சோஷலிசம் — உலகுய்யச்

செப்பும் ஞானி ஒரு பேய்
சோவியத் பூமிதனில் — செஞ்சேனை
சூழ்ந்திடும் பொன்னுலகில்
தாவிக் குதித்தது பார் — நாஜிப்பேய்
சாவை அழைத்தது பார் !
வெற்றிவெறி ஒழிய — நாசிசத்தின்
வீம்பு முற்றும் தொலைய
குற்றுயிரும் குலைய—செஞ்சேனை
குமுறிச் சாடுது பார் !
குள்ளப்பேய் சீனத்திலே—ஐந்தாண்டு
கும்மாளம் போட்ட பின்னும்
வெல்ல முடியவில்லை—ஐக்யஅணி
வெல்லுது சீனத்திலே !
சீனமும் சோவியத்தும்—உலகுக்கு
சீரிய நம்பிக்கையாய்
ஆனதின் ருதலினுல்—பாசிசப்பேய்
அழிவு திண்ணம் திண்ணம் !
மாஜன மாபெரும்போர்—பார்முழுதும்
வளரும் பான்மை கண்டால்
பாசிசம் சாய்வதன்றி—புதுப்புவி
பாங்காயெழும் உறுதி !
செஞ்சேனை வெல்கவெல்க—வணங்காத
சீனத்தின் வீரம் வெல்க !
இந்திய-சீன ஐக்யம்—உலகுய்ய
என்றும் நீடூழி வாழ்க !

# ஏ மனிதா !

ஏ மனிதா ! வாழ்வு மகாகோர்டிதோ
எளியவர் கோடி ஏழை வாடி
　　இழிவோ டேங்குகிறார்
பழியோடடிமை சுமந்தே ஏதனால் பசியால்
　　ஏ தோழா ! 　　　　　　　　வீங்குகிறார்
பலிசேன் இலைசொல்! பயனார் வழிசெல்! (ஏ மனிதா)

புவிமேல் யுத்தம் புரிவோர் பித்தம்
புலிபோல் பாய்கிறதேன் ?
　　பொதுவாய் ஜனங்கள் உயிரில் நெருப்பைப்
பொழிவார் பாய்கிறதேன் ?
　　ஏ தோழா !
புலைப்பாசிசமே தொலைத்தால் சுகமே 　(ஏ மனிதா)

(1938)

# செங்கொடி

**வா**ய் புளித்ததோ மாங்காய்ப் புளித்ததோ என்று கேட்பார்கள், செங்கொடி நிந்தனையாளர்களுக்கு வாய்தான் புளித்தது என்பதைச் சர்வ சாதாரணமாக உழைப்பாளி மக்கள் உணரச் செய்யவேண்டிய பணி, தொழிலாளர் இயக்க ஆரம்பத்தில் பெரும் பணியாக இருந்தது. அந்தக் காலத்தில் செங்கொடி உணர்வை உண்டுபண்ணப் பல பாடல்கள் எழுந்தன. அவற்றில் ஒன்று இது.

### பல்லவி

செங்கொடி ஏந்தி வாரீர்-தொழிலாளர் ஒன்றாய்ப்
பொங்கும் புதுஉலகப் புரட்சிப் போராட்டந்
தன்னில் (செங்)

### அனுபல்லவி

எங்கும் உழைக்கும் மக்கள்
ஏந்திப் போராடும் கொடி
நம்கொடி உரிமைகள் நல்கும் புனிதக்கொடி (செங்)

### சரணங்கள்

அன்றுசெய்த தியாகங்கள் அவர்க்கு நினைவில்லையா?
அடக்குமுறைத் துரோகங்கள் அனைத்தையும்
மீளலையா?

ஒன்றுபட்டுக் கொடுங்கோலை ஒடித்தெறிய
வில்லையா?
உலகக்கொடி செங்கொடி கலகக் கும்பல்தொலைய
(செங்)

முன்னர் முதலாளிக் கூட்டம் மோதி முறிக்கப்
பார்த்தார்
மூர்க்க ஜாரும் ஹிட்லரும் முடிந்தவரைக்கும்
பார்த்தார்
என்னென்ன கொடுமைகள் இழைத்தோ ஒழிக்கப்
பார்த்தார்
எல்லோரும் தோற்றுவிட்டார் ஏறுது வெற்றிக்
கொடி (செங்)

தொழிலாளி விவசாயி தோழமை காட்டுங்கொடி
சுத்தியும் அரிவாளும் துலங்கும் செந்நிறக்கொடி
எளியவர் உடையவர் இல்லையென் றுக்கும்கொடி
என்றும் எதிர்ப்பவரை வென்று உயரும் கொடி
(செங்)

# சிவப்பு ஜண்டா

இது அக்காலத்தில் பிறந்த மற்றொரு பாட்டு.

### பல்லவி

சிவப்பு ஜண்டாக்கி ஜேஜேஜே என்போம் (சிவ)

### அனுபல்லவி

சிபார்சிலாத வாழ்வுசேர்
தராதலப் பதாகை ரத்த (சிவ)

### சரணம்

தேச பேத ரஹிதம் ஓங்கும்
செங் கொடியினர் வலிமை தாங்கும்
ஆசை நேசப் பொதுமை லட்சியம்
ஆன புதுமைக் குயிர் தருவோர்
ரோஷ ஞானத் தியாக வீரர்
நோன்பில் வாழ்வில் ஏறும் ஜண்டா ! (சிவ)

# புது உலகக் கனவு

இந்தப் பாட்டு பிறந்தது 1934-ல். இது பிறப்பதற்குச் சுவை சொட்டும் ஒரு சிறிய வரலாறு உண்டு.

சுயமரியதை—சமதர்மப் பிரச்சாரம் சூறுவளிப் பிரச்சாரமாய் நாட்டில் நடந்த காலம். இந்தப் பிரச்சாரத்தால் மக்கள் உணர்ச்சி கலக்கி மறிக்கப்பட்டது. சமதர்மப் பிரச்சாரம் என்ருல், பட்டணத்திலாயினும் சரி, பட்டி தொட்டியிலாயினும் சரி, ஆயிரமாயிரமாக மக்கள் வந்து குவிந்து பலாப்பழத்தில் ஈக்கள் மொய்ப்பது மாதிரி மொய்த்துக் கிடந்த காலம். அதிகார வர்க்கத்திற்கு அடிவயிற்றில் புளியைக் கரைத்த காலமும், ஆட்சியாளர்களின் அடக்கு முறைப்பேய், கோரப் பற்களேயும், கொடிய நகங்களேயும் நீட்டி, சமதர்மிகள்மீது பாய்ந்த காலமும் இந்தக் காலம் தான்.

'குடி அரசு' பத்திரிகையில் எழுதிய ஒரு கட்டுரைக்காக திரு. ஈ.வே.ரா. கைது செய்யப்பட்டார். குடி அரசு நிறுத்தப் பட்டது. உடனே 'புரட்சி' என்ற பத்திரிகை தொடங்கப் பட்டது. அதில், அன்று பஞ்சாலேத் தொழிலாளர் பொது வேலே நிறுத்தத்தை ஒட்டித் தோழர் ஜீவா எழுதிய 'குருட்டு முதலாளிகளும், செவிட்டு சர்க்காரும்' என்ற கட்டுரைக் காக 2000 ரூபாய் சர்க்காரால் ஜாமீன் கேட்கப்பட்டது. புரட்சியும் நிறுத்தப்பட்டது. உடன் 'பகுத்தறிவு' என்ற பெயரால் ஒரு வாரஇதழ் ஆரம்பிக்கப்பட்டது.

பகுத்தறிவின் முதல் இதழில் வெளிவந்த பாட்டுதான் இந்தப் பாட்டு.

பகுத்தறிவின் முதல் இதழ் வெளிவரவிருந்த தருவாயில் விடுதலையாகி வெளிவந்த ஈ. வே. ரா. இந்த பாட்டைப் படித்துப் பார்த்ததும் ''இன்னும் 2000 ரூபாய்க்கு கனவு கண்டுவிட்டாரா?'' என்று எதிரொலிக்கும்படி செய்த பாட்டு இது.

குரல்வளமற்ற (பாடுவதற்குத்தான், பேசுவதற்கல்ல) இதன் ஆசிரியர் திருவனந்தபுரத்தில் இந்தப் பாட்டை ஒரு வடமொழிப பேராசிரியரிடம் பாடிக் காட்டியபோது அந்த மலையாள அம்மையார் இந்தப் பாட்டின் பொருட் செறிவிலும், புதுமையிலும் ஈடுபாடடைந்து இதை வெகுவாகப் பாராட்டியதோடு தாம் பாடுவதற்காக மலையாளத்தில் எழுதிக்கொள்ளும்படி உணர்ச்சி ஊட்டிய பாட்டு.

## பல்லவி

கனவு கண்டேன் கனவு கண்டேன்
களிக்கடல் மிதந்திடும் புதுக்குவலயம் கண்டேன்
(கனவு)

## அனுபல்லவி

மனஇருள் விழுங்கிடும் தினகரன் கண்டேன்
மதிஒளி பரப்பிடும் புதுமுறை கண்டேன்
(கனவு)

## சரணம்

ஆண்டை அடிமையெனும் அவச்சொல் அங்கில்லை
ஆண்பெண் பேதம் பாராட்டும் அழிகிறுக்கில்லை
வேண்டும் சுயேச்சைப் பேச்சில் விதிவிலக்கில்லை
மீறும் சட்டதிட்டங்கள் கூறுவோரில்லை (கனவு)

மனித சமாஜத்தார் வாழ்வினைக் கண்டேன்
மன்னும் அபேதவாத நன்னிலை கண்டேன்
புனித வாலிபக்காட்சி இனிதுறக் கண்டேன்
பொங்கும் போகபாக்கியம் எங்கணும் கண்டேன்
(கனவு)

கவலையில்லா வாழ்வின் சுவைமிகக் கண்டேன்
கருத்தில் துணிவில்யாவும் உருப்படக் கண்டேன்
நவநவமாக இன்பம் தவழ்வதைக் கண்டேன்
நாகரிக உச்சியில் நடனங்கள் கண்டேன் (கனவு)

கடவுளைக் காத்திடும் கசடரங் கில்லை
கவைக்குத வாதமதக் கற்பனை யில்லை
அடம்செய்யும் புரோகிதத் தடியரங் கில்லை
அநியாயப் பணக்கார சனியன்க ளில்லை (கனவு)

# தியாகமே வாழ்வு!

புரட்சி, பொதுஉடைமை என்ற சொற்கள் மந்திரச் சொற்களைப்போல், இளைஞர்களின் உள்ளங்களில் உணர்ச்சித் தீச்சுவாலை விட்டெரியும்படி செய்துகொண்டிருந்த காலம். மீரத் சதி வழக்கு வீரர்கள், பகவத்சிங்கின் கூட்டாளிகள் ஆகிய புரட்சிக்காரர்களின் நடைமுறைத் துணிச்சலும், தியாகப் பெருமையும் வாலிப உலகை—அதன் சூடேறிய ரத்தத்தையும் முறுக்கேறிய நரம்புகளையும் அம்மானை ஆடிக் கொண்டிருந்த காலம்.

தமிழக இளைஞர்களை சமதர்ம லட்சியத்தை நோக்கி, தியாகத் திசையில் திருப்பத் தேவை ஏற்பட்ட காலம் அது. அப்பொழுது முளைத்த பாட்டு இந்தப் பாட்டு.

### பல்லவி

வாலிபத் தோழர்களே! தியாகந்தான்
வாழ்வு, நல்வீரர்களே! (வாலிபத்)

### சரணங்கள்

கூலிகள் ஒய்வும் இன்பமும் கூட
கேலிசெய் வீணர் தினம் வாட (வாலிபத்)

கொடுமையும் போரும் அடிமாண்டு போக
அடிமை யகன்றுசீ ருண்டாக (வாலிபத்)

முதலாளி ஆட்சி முறிந்துடன் வீழ
தொழிலாளர் ஆதிக்கம் வாழ (வாலிபத்)

தூக்கிடும் மேடை துரும்பென ஓங்க
நோக்கும் பொது உடைமை தாங்க (வாலிபத்)

# கய்யூர்த் தோழர்களுக்கு!

''பீப்பிள்ஸ்வார்''—இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆங்கில வார ஏட்டில் வந்த வங்கப் பாட்டின் தமிழாக்கம் செய்தவர் தோழர் ப. ஜீவா. 31-3-1943 ''ஜனசக்தி''யில் வெளிவந்தது.

விறல் வீரத் தோழர்களே, வெல் புரட்சி
வாழ்த்துமக்கு!
அறைபட்டு நசுக்குண்டலறு மனித குலத்தின்,
ரத்தச் சிவப்பேற்ற நல்லுலகம் கண்சிவக்க,
ரத்தச் சிவப்பேற்ற நன்முஷ்டி தானுயர்த்தி,
வாழ்த்துகின்ற(து) ஆஹாஹா! வருகின்ற
காலமதை,
வீழ்த்த ஒண்ணு உங்களுடைய வீரஉயிர்
இல்வாழ்க்கை,
போற்றி வளர்க்கும் புத்துருவமும் நல்கும்
ஆற்றல்மிகு தோழர்களே, அரும் புரட்சி
வாழ்த்துமக்கு!

வருகிறுன், பஸிஸப் பகைச்சனி வருகிறுன்,
குருதிவெறிகொண்ட கூர்நகக் கழுகுபோல்,
எதிர்த்து முறியடிக்கும் ஏறுநிகர்ப் பேருணர்ச்சி,
மதர்ந் தெழுந்து கொந்தளித்து மாவீர்காள்!
உங்கள்,

நாடிகளில் ஓடுது நும் ரத்தக் குழாய்களிலே
பீடுயர் சக்திப் பெருகி வழியு (து). உங்கள்,
ஒவ்வோர் துளிரத்தத்தும் ஒப்பற்ற நல்லுறுதி.
செவ்வையாய் யுங்கள் சீரியல் உணர்ச்சியும்

சக்தியும் உறுதியும் மக்களின் வாழ்வில்
உத்தம பட்சம் ஓங்கி நிற்கின்றன—நீவிர்
விட்ட கல்வேலையை வீரங்கொள் மக்களெல்லாம்
தொட்டுத் தொடர்ந்து துலங்க முடித்திடுவர்
என்னும் செய்தியினை எடுத்துரைக்கும் லோகயுத்தம்
இன்னுயிர்த் தோழர்களே ! எம்புரட்சி
வாழ்த்துமக்கு !
அச்சமில்லை சந்தேகம் அணுவள வேனும்இல்லை
கொச்சை அபாயம் குலவுகின்ற காலத்தின்

சீறுகின்ற பார்வை 'திருதிருத்து'ப் போகிறது.
பேருலகப் பொதுமக்கள் நீரிருந்த ஸ்தானத்தில்
வந்துவிட்டார். இன்று வன்பகைவர்
கோட்டையுள்ளே
புன்செருக்கு அழிவின் போக்கைக் குறிக்கிறது;
சீற்றக் கண்மூர்க்கம் தீத்தோல்வி காட்டுகிறது.
போற்றரிய உங்கள் பொன்னான தியாகந்தான்
வெற்றி—உலக மக்கள் வெற்றிக்கு முன்னுரையை
இன்றே எழுதிவிட்ட (து) ! என்றென்றும் பெருமை !

வெற்றி விறல் தோழர்களே, வெல்க புரட்சி
வாழ்த்துமக்கு !

# ஏங்காதெழுந்திரடா!

இது வீரச்சுவை மிக்கப் பாட்டு. பொதுமையாகக் கடமையை வற்புறுத்தும் பாட்டு. செயலில் குதிக்கக் கொதிப்பேறி ஓடும் குருதியில் தெம்பு பாய்ச்சும் பாட்டு.

பொதுமக்கள் எதிர்கால வெற்றியில் நம்பிக்கை வைக்க வேண்டும். இளைஞர்கள் சமதர்மப் போராட்டத்திற்கு வாழ்வைத் தத்தம் செய்ய வேண்டும். இந்தக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு ஒரு கருவியாக உருவாக்கப்பட்ட பாட்டு இது.

ஏங்கா தெழுந்திரடா—தோழனே
இல்லாமையை நசுக்கு!

ஆங்காரமாய்ப் பொருது—ஆதிக்கம்
அத்தனையும் பொடி செய்!

ஞானத்தை உண்டு வளர்—தோழனே
ரத்தம் கொதித்திட வாழ்!

மானத்தில் மூச்சு விடு—அடிமையை
மண்டையிலடித்துக் கொல்!

சஞ்சலப் பாம்பை யடி—தோழனே
கெஞ்சலைக் காறி உமிழ்!

கொஞ்சும் சுயேச்சையிலே—களித்திடக்
குறித்துப் போர்முனை செல்!

தொல்லைப் புரோகிதமும்—பணக்காரச்
சூழ்ச்சிச் செருக்குகளும்

இல்லை என்றடிக்கவே—தோழனே
இக்கணமே துணிவாய் !

இன்பப் பொதுவுடைமை—தோழனே
இங்கு முளைத்திடவே

துன்பத்தை வென்றுவிடு !—தோழனே
தூக்கு மேடை துரும்பு ! (ஏங்கா)

(1937)

# மனிதராய் வாழ்வது

•

### பல்லவி

மனிதராய் வாழ்வது கவலையதானல்
மானிட ஜன்மம்தான் மகிமையுமாமோ ! (மனித)

### அனுபல்லவி

தனியொரு கொடுமையால் அடிமைகளானேம்
தாரணி மீதில்நாம் தரித்திரரானேம் (மனித)

### சரணங்கள்

அநியாய ஏகாதிபத் யத்தாலே
ஆங்கிலராட்சியின் அழிம்புகளாலே
இனியொரு வாழ்வுண்டோ எனப்பரி தவித்தோம்
இந்தியர் என்றதும் இகழ்ந்திட உதித்தோம் (மனித)

இருப்பதா இறப்பதா எனஉயிர் கூவுது
எங்கே விடுதலை எங்கெனத் தாவுது
உருப்படி யானநல் வாழ்வடை வோமா
உயரும் சமத்துவப் பயனடை வோமா ? (மனித)

இருக்கிற நிலைமையில் எதுவும் உதவாது
'இங்குலாப் ஜிந்தாபாத்' என்போம் இப்போது
பொறுப்புடன் சமதர்மப் போர்செய்ய அஞ்சோம்
பூரண விடுதலைக்கு யாரையும் கெஞ்சோம் (மனித)

*(1939)*

# விழிகண் குருடு!

கண்டும் கேட்டும் மண்டுகம் போல்
காலம் தள்வதா-காலம் தள்வதா; அலங்
கோலம் கொள்வதா-இதைக் (கண்டும்)

அண்டை அயலார் நாட்டில் - மக்கள்
அறிவுடன் வாழ்கிறூர் மேட்டில் - நாம்
அடம் பிடித்தே பல விடம்குடித்தே - இங்
கழிகின்றேம் சிறைக் கூட்டில்-இதைக் (கண்டும்)

**தொகையறு**

உழைப்பவனே பறைச்சாதி! உணவூட்டும் தாய்
அடிமை!
இளைப்பவனே பாட்டாளி! எக்களிப்போன்
சோம்பேறி!
தழைப்பதுண்டோ மடச்சண்டித் தனக்தாலே
வாழ்வதுண்டோ
கொழுத்ததொந்தி ஒருபக்கம் கோடியர் வாடல்
முறையோ?

**பாட்டு**

வீரொரு ஞானமுள்ளோரே பூவில்விரும்பி
முன்னேறுகின்றூரே
நாம் விழிகண் குருடென இழிபொந்துகளில்
அழிவதில் என் சீரே-இதைக் (கண்டும்)

(1936)

# வாழ்வினிலே எழும் கீதம்

வாழ்வினிலே எழும் கீதம்
வஞ்சமகன்ற செஞ்சொற் கீதம்
மண்ணில் இனிய கீதம் (வாழ்)

வாட்ட மிகும்துயர் ஓட்டும் கீதம்
வல்லமை ஏற்றிடும் கீதம்
கேட்டவர் நெஞ்சில் புத்துயிர் கொஞ்சி
கிளர் மனோகர கீதம் (வாழ்)

தொலை அண்மையில் சூழ்நிலை எங்கும்
ஜனம் திரண்டிடவும்
தோல் இலைப்பாரோர் புகழ்
மனம் மயங்கிடவும்
ஆ......என் சொல்வோம்! புரட்சி முழக்கம் (வாழ்)

பலாபலன்கள் விதியினில் சதிகள்
உலாவிடும் பொழுதில்
சீல மிகுந்தோர் ஆவல் துடிக்க
புரட்சி செய் என்றார்
காலமெல்லாம் அதன் காதலைப் பாடி
கழியட்டும் என் வாழ்வு! (வாழ்)

(1946)

# எப்படி வாழ்ந்தனரோ?

**பல்லவி**

எப்படி வாழ்ந்தனரோ-தோழர்கள்
அப்படி வாழநான் ஆசை கொண்டேன் மனமே
(எப்படி)

**அனுபல்லவி**

ஒப்பிடும் தியாகம் ஓயா துழைத்தாலும்
உணர்ச்சிப் பெருக்கும் கொண்டே
புரட்சிப் பாதையிற் சென்றே (எப்படி)

**சரணம்**

விடுதலை வீரர்களும் வெற்றி விஞ்ஞானிகளும்
குடியரசன் பர்களும் கொடுங்கோல் எதிரிகளும்
அடிமை வறுமை நீங்கி அரசும் புவியும் ஓங்கும்
படிநொடி தவறுமல் துடிதுடிப்போடும் தினம்
(எப்படி)

(1946)

# வந்திடாதோ!

அந்த நாளும் வந்திடாதோ
சொந்த சுதந்திரம் வந்தது என்றும்
நிந்தனையின்றி சந்ததம் வாழும் (அந்த)

அனைவரும் கூடி அரசியல் நாடி
அதில்பிரதிநிதித்துவம் அனைவர்க்கும் தேடி
ஜனநா யகமுறை தழுவிக் கொண்டாடி
இனப்பகை பணச்சதி இல்லையென் றுகும் (அந்த)

ஆணினம் பெண்ணினம் நிகரென நோக்கும்
அடிமையும் ஆண்டையும் இலையெனும் போக்கும்
பேணும் உரிமையின் பெருமை எல்லோர்க்கும்
பிழையா துலகில் பெருமை எல்லோர்க்கும் (அந்த)

உழவனும் மில்லில் உழைப்பவ னோடு
உடலால் அறிவால் உழைப்பவ னோடு
அழுவதும் சாவதும் ஆச்சவக் கேடு
அல்லல் தீர்ந்தவர் ஆனந்தம் எய்தும் (அந்த)

நீதியில் லாப்பெரும் சூதுக் காரன்
நிதிமுத லாளி கொடுங்கொலை காரன்
போதும் போதுமிப் படுபழி காரன் அச்
சூதை விழுங்கும் சுடரொளி வீசும் (அந்த)

(1946)

## மாநிலம் சகித்திடுமோ!

பூமியில் தோன்றிய நாள் முதலாகப்
புண்பட வாழ்ந்தோம்; புகலறி யோம்!
ஏமாற்ற மும்துய ரமும்எமைச் சூழ்ந்தன
இத்தனை காலமும் ஞாய முண்டோ?

மேனி தளர எலும்பு முறிந்திட
மேடுகா டெங்கணும் ரத்த நீரால்
தானியங் கள்மலை போல்விளை வித்தவர்
தரணியி லேபசித் தழுதிட வோ?

பாடுபட் டோர்பல வேறுமற்றார் மா
பாவிகள் கொள்ளை மீறு தய்யோ?
கேடு கெட்டமுத லாளிகள் ஆட்சியில்
கேள்விமுறை யில்லை போலும் அந்தோ!

ஆணவ மும்திமி ரும்கொடுங் கோன்மையும்
ஆஹா ஹாவென்று ஆர்ப்ப ரிக்க
மானமுள்ள மக்கள் வாழ்வு சிதைந்திடில்
மாநிலம் என்றும் சகித்திடு மோ?

# ஆற்றுவாரில்லை

1

ஆற்றுவா ரில்லை தேற்றுவா ரில்லை
ஆட்சி பலமும் இல்லையே (ஆற்று)

நாற்றமும் சேறும் வாழ்வினை மூடி
நாறுகின் றோம் வாடி (ஆற்று)

பொழுதெல்லாம் நாங்கள் அழுதழுது செத்துப்
போகவோ வந்து பிறந்தோம் (ஆற்று)

வரியும் கடனும் எம்வயிற்றி லடிப்பதால்
வந்த வினை மாயாதோ ? (ஆற்று)

வேலையும் இல்லை கூலியும் இல்லை
மெத்தத் திண்டாட்டம் அந்தோ ! (ஆற்று)

வெற்றர சாலே வீழ்ந்திட லானோம் !
வெற்றி இன்பம் காணோம் ! (ஆற்று)

(1937)

# நித்தம் நரகம்!

நித்தம் நரக மிங்கே—இது
நிச்சய மாயிரம் சத்தியம் செய்குவேன் (நித்தம்)

உத்தமராம் உழைப்போர்—இங்கு
ஓயாக் கவலையால் நோயால் மடிகிறார்
கத்தும் அழுகைக் குரல்—வெறும்
காற்றிற் கலக்குதே மாற்றுவா ரில்லையே
சித்திரப் பேச்சுக்க ளால்—பொய்யர்
செத்தபின் இவர்க்கு முக்தியுண் டென்கிறார்!
அத்து மீறிப் போச்சே—கொடும்
அக்ரமியர் சேஷ்டை உக்ரமாய் வாட்டுதே!(நித்தம்)

வேர்வையில் ரத்த மெல்லாம்—சிந்தும்
வேலைக் காரர்நல்ல கூலிபெற் றறியார்
மார்வலி காணு மட்டும்—உழைத்து
மண்ணிற் பொன்விளைக்கும் மக்கள் பசிக்கிறார்!

சோர்வதில் தேவாங்கு—இவர்
சுற்றும் பெண்டுபிள்ளை குட்டிகள் வாடுறார்
யார்வைத்த தீவினையோ ?—என்று
ஏங்கி ஏங்கி ஏங்கியேங்கித் தவிக்கிறார் ! (நித்தம்)

இட்டதைத் தின்கின்ற நாய்—அற்ப
இச்சையில் மூழ்கியே துச்சமுறும் பன்றி
மட்டித்தனக் கழுதை—போல
மக்களிற் கோடியர் மாக்களாய் வாழ்கிறார் !
வெட்டை நோயாடவர்தான்—கற்பு
வித்தார மாய்ப்பேசி வீம்படிக்கும் போது
பெட்டைக் கோழிபோல—பெண்கள்
பீத்தல் பழமையைப் பேணிக் கெடுக்கிறார்! (நித்தம்)

சஞ்சலப் பேடித்தனம்—வேஷ
தாரித்தனம் அதி காரத்தன மின்றும்
கொஞ்சமல்ல தனங்கள் !—மக்கள்
குட்டிச் சுவராகக் கூத்தாடு கின்றனர் !
பஞ்சை பனாதியரை—இந்தப்
பாரில் உயர்த்திடல் வீரர்களின் கடன் !
மிஞ்சியதோர் நரகம்—இன்னும்
மேவுமென் போர்படு பாவியார் வஞ்சகர் ! (நித்தம்

(1935)

# வைதீக நீலிக் கண்ணீர்

மாலைக்கண் வைதீக நீலிக்கண்ணீர் வெறும்
மண்ணிற் கலைந்துமே போச்சே !
காலம் செல்லச்செல்லக் கோலம் புரள்வதை
காட்டும் நவயுக மாச்சே ! (மாலை)

அஞ்ஞானம் பெற்றிட்ட அப்பு அழுக்குகள்
அத்தனையும் அற்றுப் போச்சே !
விஞ்ஞானத்தின் வழி மெய்ஞானத்தின் வாழ்வில்
வீறுஞ் சுகிர்தமு மாச்சே !
வேதிய னோடு மடாதிபதி பொய்யர்
வீணர் பிலுக்குகள் போச்சே !
சாதி மதமறி யாது வொழுகிடத்
தக்க சமத்துவ மாச்சே !
தீமை செய்யும்முத லாளிமார் டம்பங்கள்
திக்கெட்டும் 'புஸ்' என்று போச்சே !
ஊண்மைத் தொழிலாளர் சேமநிலை நாடி
ஒன்றாய்த் திரண்டிட லாச்சே !
பொல்லா ஜமீன்கொழுப் பெல்லா முருகிப்பின்
போஞ்சு கதையாகிப் போச்சே !

இல்லாமை யாலேங்கி எச்ச விவசாயி
இன்பக் கடலாடா லாச்சே !
மன்ன ரதிகார வர்க்கத் தினர்க்குற்ற
மாண்பிற்(கு) அடியற்றுப் போச்சே !
இன்னலுற் றடிமை தன்னில்வீழ்ந்த மக்கள்
இன்னுரிமை காண லாச்சே !
ஏக போகத்தினோர் ஆடவர் ஜம்பங்கள்
இம்மியுஞ் செல்லாது போச்சே !
தோகை மயிலினத் தார்கை வலுப்பெற்றுத்
துள்ளி யெழுந்திட லாச்சே !
தேசிய மும்சுய ராச்சியமும் செல்வர்
சீர்கள் என்றிடப் போச்சே !
மாசிலா யோகியர் வாத சமதர்மம்
மக்கள் தெளிந்திட லாச்சே ! (மாலை)

# எங்கள் கட்சி

கட்சியைக் காக்க உயிர் கொடுப்போம்
காசு டணந்தந் ததை வளர்ப்போம்
நிச்சயம் வெற்றிக் கொடி பிடிப்போம்
நீசத் தடைகள் பொடி பொடிப்போம்
அச்சமில் லாதுவி டாதுழைப்போம்
அவசரச் சட்டம் அலற வைப்போம்
கொச்சை மனிதர் கூற்றை மதியோம்
குந்திப் பயந்து கொள்கை சதியோம்
ஏகாதி பத்திய எதிர்ப்பினிலே
என்றும் எவர்க்கும் முன்நிற்பதிலே
வாகான ஒற்றுமை ஊட்டத்திலே
வகுப்புவாத மற்ற நாட்டத்திலே
நோகாத கும்பல் ஒழிப்பதிலே
நொந்த உலகம் செழிப்பதிலே
ஆஹ்றாஎன் றேயெழும் எங்கள் கட்சி
அடக்க முடியாத மக்கள் கட்சி
கண்ணைத் திறந்தது எங்கள் கட்சி
கருத்தை நிமிர்த்தது எ்ங்கள் கட்சி

உண்மை உணர்த்திட வந்ததெது?
ஊக்கம் உயிர்நோக்கம் தந்ததெது?
எண்ணமெல் லாம்புது வாழ்வினிலே
ஏற்றிய தெக்கட்சி நாட்டினிலே?
கண்ணனைய கட்சி காத்திடுவோம்
கைநிறை யப்பொருள் சேர்த்திடுவோம்
சின்னியம் பாளையத் தோழர்களே
சிங்கார வேலன்போல் தீரர்களே
பொன்மலை சிங்கையின் தியாகிகளே
பொன்றுப் புகழ்க் கோவைத் தோழர்களே
நன்மதுரை தந்த மானுடரை
பன்மடங் காகப் பெருக்கும் கட்சி
பணமின்றிச் சாகுமோ எங்கள் கட்சி?
ஆயிர மாயிரமாகச் சேர்ப்போம்
அனைவரும் அப்பணியிற்கை கோப்போம்
தாயென உள்ளதெல்லாம் சுரந்து
தன்கை தனக்குத் துணை தெரிந்து
தோ:யும் கட்சிப் பற்றில் தந்திடுவோம்
தொழிலாளர் உழவர்முன் வந்திடுவோம்
ஓயமாட்டோம் தலை சாயமாட்டோம்
ஒரு லட்சம் காணுதுறங்க மாட்டோம். (கட்சி)

(1947)

# புரட்சி

1

புரட்சி என்பது புதுமைக் கூத்து
புரட்சி என்பது புத்துயிர் வெள்ளம்
புரட்சி என்பது புதிரைத் தீர்த்தல்
புரட்சி என்பது போரிற் பெரிது
புரட்சி என்பது புதுமைக் கீதம்
புரட்சி என்பது புத்துயிர் முரசு
புரட்சி என்பது பொறுமைக் குறுதி
புரட்சி என்பது போம்பணிக் கறுதி
புரட்சி என்பது பூகம்ப வேகம்
புரட்சி என்பது பூரண மாற்றம்
புரட்சி என்பது புரட்டின் வைரி
புரட்சி என்பது புவித்தாய் நகைப்பு!

# இண்டர்நேஷனல்

1942-ம் வருடம் சிறையில் இயற்றப்பட்டது.

எழுமின் ! பசிச்சிறை புகுந்தீர் !
எழுமின் ! அனாதை உலகீர் !
வளர்நீதிப் போர்க்கர்ச் சனையினாலே
மலர்கின்றது பொன்னுலகு !
மாமூல் விலங்குகள் பிணைப்பு
வாராது வாழ்விலே
எழுமின் ! அடிமைப்பட்டோர் எழுமின் !
இங்கடிமை ஏதினி மேலே
முடிவான போரெழுந்தே
முனைவீர் தோழர்காள் !
நம்இண்டர் நேஷனல்
சுதந்திர உலகுய்க்கும் !

—:✽:—

